# காசி

அல்லது

## நமது புண்ணிய பூமி.





கே. எஸ். சுந்தரம்.

கே. எஸ். முத்தையா அண்டு கம்பெனி,
காசி, சென்னை.

ஓம்

# காசி

அல்லது

## நமது புண்ணிய பூமி.

இஃது

கே. எஸ். முத்தையா அவர்களால்

இயற்றப்பட்டது.

---

காசி, ஸில்க் ஹவுஸ்

கே. எஸ். முத்தையா அண்டு கம்பெனியாரால்

வெளியிடப்பட்டது.

---

மூன்றாம் பதிப்பு—2000.

சென்னை:

முத்தையா பிரசில்,

அச்சிடப்பட்டது.

காபி ரைட்] 1929. [விலை ரூ. 1-4.



VISVESWAR'S TEMPLE—GOLDEN DOMES

ஸ்ரீ விஸ்வேஸ்வர் ஆலயத்தின்
தங்கஸ்தூபி, காசி.

PHOTO BY K. S. MUTHIAH.

# பொருளடக்கம்.

# சித்திர அட்டவணை.

## முன்னுரை.

இந்நூல் மூன்றும் பதிப்பு. முதலிரண்டு பதிப்புகளைத் தழுவியே இதுவும் பதிப்பிக்கப் பட்டிருக்கிறது. முன் பதிப்புகளைப் போல, இந்தப் பதிப்பையும் தமிழகத்தார் ஆதரிப்பார்களானுல் என் முயற்சி நன் முயற்சி ஆயிற்றென்று மகிழ்ச்சியடைவேன்.

கே. எஸ். சுந்தரம்,
பதிப்பாளர்.

காசி,
15–2–29.

உ

சிவமயம்.

# காசி

* தானங்க ளெதுசொற் றூலுந் தனைமுத லெடுத்துக் கூறு
மானங்க ளுடைய தாகி மாதேவன் வடிவுற் றூர்க்கு
ஞானங்க ளோடு நல்கி நலமுற வைகு மொண்பூங்
கானங்கள் பொலியுந் தெய்வக் காசியை வணக்கஞ் செய்வாம்.

ஆரியவர்த்த மென்னும், நெடிய கடல்சூழ்ந்த நம் தாய் நாட்டின் கண் இருதய கமலமாயும், புராதனமாயும், அதிரமணீயமாயும், அசி, வருணை என்ற இரண்டு நதிகளுக்கும் மத்தியில் விசாலமும் கம்பீரமுமான கங்காநதியின் கரை ஓரத்தில் நீர்வளம், நிலவளம், பொருந்தித் தீபச்சுடர் போன்று ஜ்வலித்துப் பிரகாசித்துக்கொண்டிருக்கின்ற, இந்தமஹத்தான "ஸ்ரீ காசி" க்ஷேத்திரம் அதன்மகிமை பெருமைக்கேற்றவாறு பல நாமதேயங்களால் அழைக்கப் பட்டுள்ளது. அவை காசி, வாராணசி, அவிமுக்தம், ஆநந்தகானம், உருத்திரவாசம், மாமசானம், கௌரிமுகம் என்னும் சப்த(ஏழு)நாமதேயங்களாம்.

---

* காசி ரகசியம்.

* தேசொடும் பொலிந்து முத்தித் திருமக ளுறைத றன்று
காசியென் றுரைப்ப ரென்னக் கடனிற வண்ணன் கேட்ப
ஈசன்முன் னுரைத்த தெல்லா மென்னம ரன்னே யோடு
பேசலுங் கேட்டதன்பாற் பிறழ்ந்திடா துரைத்திட்டேனல்.

* ஆதலிற் றீமை யோர்கட் கடையொணு நசியி னேடு
மேதகு வானே யாறும் விழைதக வொழுகு மாற்றல்
மாதவக் கிழமை பூண்ட முனிவர வளங்கொள் காசிக்
கேதமில் நாமம் வாரா ணசியென விசைந்த தாமால்

* உடைதிரைப் பரவை யேழு முடைந்துய ரண்ட கோடி
யடைவுகெட் டிறந்த ஞான்றும் அமலனும் உமையுமாக
விடலரி தாகி யீங்கு வீற்றினி திருத்த றன்று
விடுபெய ரிதற்கும் நாளும் அவிமுத்தம் என்பர் மாதோ.

* திருவமர் காசி நாளுஞ் சிவானந்த மளிக்கு மாற்றாற்
பெருகும் ஆனந்தகானம் எனும் பெயர் பெற்ற தன்றே.

* வரித்தடங் கண்ணி பாகன் மருவிய காசி தன்னி
லருத்தியி னுறைவோ ரெல்லா மமலனல் லுருவு தாங்கி
யிருத்தலாற் புவன கோடி யாவது மோசை போய
உருத்திர வாசம் என்று முறுபெய ருடைத்து மாதோ.

* மன் பெரும்பூத மெல்லா மொடுங்கலின் மாமசானம் என்பர்.

---

சப்த நாமங்களுக்கும்.

## அதன் காரணப்பரியாயப் பெயர் வருமாறு.

---

கீர்த்தியுடன் விளங்கி, மோக்ஷலக்ஷ்மிவசிப்பதனல் காசி யென்றும், அசி என்னும் நதியுடன் மேம்பட்ட வாணை என்

* காசிகண்டம்.

ளும் நதியும் விரும்பும்படி செல்கின்ற தன்மையால் ‡ வாரா ணசி என்றும், மறிகின்ற அலைகளையுடைய சத்த சமுத்திரங்க ளும் பெருக்கெடுத்து உயர்வாகிய பல்லாயிரங்கோடி அண்டங் களும் நிலை குலைந்து அழிந்த ஊழிக்காலத்திலும், சிவபெருமா னும், உமாபிராட்டியாருமாக நீங்காமல் இக்காசியம்பதியில் எழுந்தருளியிருத்தலால் அவிமுத்தம் என்றும், செல்வம் பொருந்திய காசிக்ஷேத்திரம் எக்காலமும் சிவாநந்தவாழ்வைத் தருகின்ற தன்மையால் ஆனந்தகான மென்றும், கீற்றுக்கள மைந்த பரந்த கண்களையுடைய விசாலாக்ஷியம்மையாரைப் பாகமாகவுடைய ஸ்ரீ விச்சுவநாதப்பெருமான் வீற்றிருக்கும் காசி நகரத்தில் ஆசையோடு வசிப்பவர்கள் யாவரும் சிவசாரூ பம் பெற்றிருத்தலால் அண்டகோடிகளிலெல்லாங் கீர்த்தி பெற்ற உருத்திரவாசம் என்றும், நிலைபெற்ற ஐம்பெரும் பூதங் களும் அதனிடத்தொடுங்கலால் மாமசானம் என்றும், காஞ்சி முதலிய சத்தி பீடங்களுள் காசி முகபீட மாதலால் கௌரி முக மென்றும் பொருந்திய திருநாமங்கள் விளங்கலாயின.

சத்தி பீடங்களின் காரண விவரம் வருமாறு:—சிவாபரா தம் செய்த தக்கனுக்குப் புத்திரியாயிருத்தல் கூடாதென்று, மந்திரகலாமயமான திருமேனியை நீக்கி உமாதேவியார் அத் திருமேனியின் முகம் முதலிய அங்கங்களைக் காசி, சுவால முகி, ஏமகூடம், காஞ்சி, முதலிய திவ்விய க்ஷேத்திரங்களி லிடும்படியாக ஆக்ஞாபித்ததினால் அவ்வங்கங்கள் சேரப் பெற்ற ஸ்தலங்கள் சிவசத்திக்குரிய பீடங்களாயின

‡ வரணை + அசி—வாராணசி.

உலகமெல்லாங் கொண்டாடத்தக்க திவோதாஸன் என்ற பக்தனுக்கு சிவபிரான் அளித்த வரப்படி காசியம்பதியை விட்டுச் சிவபிரான் மந்திரமலையை அடைந்திருந்த காலத்தும் காசியில் லிங்க ரூபமாய் சிவபிரான் மறைந்திருந்தனரென்ப. பிரளயத்தினிறுதியில் சர்வ பிரபஞ்சமு மொடுங்குமிடத்துக் காசிமட்டும் திரிசூலத்தின் நுனியில் தேஜோ ரூபமாய்ப் பிரகாசித்து அதனுள் சிவனொருவரே முடிவில் நிலைத்திருந்து பிரகாசித்ததாகவும் கூறப்பட்டுள்ளது.

காசியென்றுரைக்க, காசியைக்காணக்
காசியை நினைக்கவே முத்தி
காசியில் வசிக்கக் காசியிற் சூழக்
காசியைக் கேட்கவே முத்தி
காசியென் றுருவா றேற்றிடின் முத்தி
கருத்துடன் மனமது திருத்திக்
காசியில் வசித்தோர் தம்மையே கண்டு
கழலது போற்றிடின் முத்தி.
ஆரணம் உரைக்கும் அருங்கருத்தெல்லாம்
அவனியில் வாராணசியையே

---

* நாற்பதமென்பது—சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுஜ்யம், என நான்கினையுமாம். இதனைமுறையே வாராணசியை நினைத்தோர், மொழிந்தோர், தரிசித்தோர் வசித்தோர், அடைவரென்பதாம். மற்றொருவிதம்: தர்ம, அர்த்த காம, மோக்ஷமெனினும் பொருந்தும். இவ்வாறன்றி—சரியை கிரியை, யோகம், ஞானமென்னும் நாற்பத மெனினும் பொருந்தும்.

ஆரணம் உரைக்கும் * நாற்பதமெல்லாம்
அன்புறு வாராணசியையே
ஆரணம் உரைக்கும் தோத்திர மெல்லாம்
அனைத்துமே வாராணசியையே
ஆரணம் உரைத்தும் பயனறியாதால்
அதன்பயன் உரைப்பவர்யாரே.

* கண்ணுதலா லயநோக்குங் கண்களே கண்கள்
கறைக்கண்டன் கோயில்புகுங் கால்களே கால்கள்
பெண்ணொருபா கனைப்பணியுந் தலைகளே தலைகள்
பிஞ்ஞகனைப் பூசிக்குங் கைகளே கைகள்
பண்ணவன்றன் சீர்பாடு நன்னாவே நன்னா
பரன்சரிதை யேகெட்கப் படுஞ் செவியே செவிகள்
அண்ணல்பொலங் கழனினைக்கு நெஞ்சமே நெஞ்சம்
அவனடிக்கீ ழடிமைபுகு மடிமையே யடிமை.

அன்பின் மலர்தூய்ச் சிவலிங்க மருச்சித் தோர்க ளமரரெல்லாம்
மின்ப மெய்த வழிபட்ட பலநெய் நுதல்போ லடைந்தவர்தந்
துன்ப மகற்றும் புனற்கங்கை தோய்ந்தோர் கடவுணதியனைத்து
நன்கு படியும் பேறனைத்து மொழியா தினிது நண்ணுவரால்

° கடவுட் கங்கை நதிப்படிவான் செல்ல வொருவன் கருதுமுன
மிடர்கூர் பாவமவனையொழிந் தியாண்டுசெல்வோமெனக்கருதும்.

ஒருவன் காசிக்கு கங்காஸ்நானம் செய்யப்போகின்றேன் என்று தனது பாதத்தை முன்னிட்டு முன்னிட்டு வைத்தால் அவனுடைய சகல பாபங்களும் பின்னிட்டுப் பின்னிட்டு ஓடிப்போகும். 'காசிக்குப் போகின்றேன் நான்' என்ற உரைகளைக் கேட்ட அளவில் பிரம்மஹத்தியாதிகள் முதலிய மகா கொடிய பாவங்கள் பயப்பட்டு ஓடும். கங்கா என்னும் நாமத்தைத் தியானஞ் செய்த மாத்திரத்திலே பஞ்ச

* பிரம்மோத்திர காண்டம் ° காசிகாண்டம்

கவியத்தினாலும் ஆகமதீக்ஷா கருமத்தினாலும் அடையக்கூடிய பரிசுத்தத்தையும் பலப் பிராப்தியையும் அடையக்கூடுமென்ற விவரம் நமது மதநூல்களிற் கூறப்பட்டுள்ளது.

நெற்றிக்கண்களையுடைய பரமசிவன் வீற்றிருக்கும் ஆலயத்தைத் தரிசிக்குங் கண்களே நல்ல கண்கள், காளகண்டத்தையுடைய அந்த பரமசிவன் வீற்றிருக்கும் ஆலயங்களுக்குச் செல்லுகின்ற கால்களே நல்ல கால்கள், பார்வதி தேவியை இடப்பாகத்தில் வைத்தருளிய அந்த கருணைக்கடல் வள்ளலாரை வணங்கும் தலைகளே நல்ல தலைகள், பிஞ்ஞகனென்னு மொரு திருப்பெயரையுடைய அந்த சோதிலிங்க மூர்த்தியை அருச்சிக்குங் கைகளே நல்ல கைகள், கங்கையைச் சடாமகுடத்தணிந்த அந்த விஸ்வநாதரின் புகழைப் பாடுகின்ற நாவே நல்ல நா, அவரின் அற்புத சரிதங்கள் கேட்கப்படுங் காதுகளே நல்ல காதுகள், மகத்தான அந்த பகவானின் திருவடிகளைத் தியானிக்கும் மனமே நல்ல மனம். தேன் துளிக்கின்ற தாமரை மலரையொத்த அவர் தந் திருவடிகளுக்கு அடிமை பூண்ட அடிமைத்திறமே நல்ல அடிமைத்திறம்.

* காசியெனு மொருதலமிக் கயிலையினுஞ்
சிறப்புளது கங்கை தீர்த்தம்
வீசுதிரைக் கொழுந்தோட்டிப் பாகதிக்கு
வேரோட்டும் வியந்து மூழ்கின்
மாசினுட லதிலிறந்தால் மரமேனும்
விலங்கேனும் மனித ரேனு
மீசனரு ளுபதேசஞ் செவிப்புகல
விறைவனென விருக்கலாமே.

---

* அருணாசல புராணம்.

சர்வசத்தி ரூபமாயும் சர்வ ஜீவதயாபரராயுமுள்ள பரம சிவன், பந்தபாசத்தினுல் பிணிப்புண்டுழலும் ஆன்ம கோடிகள் பிறத்தல், இறத்தல். காண்டல், நினைத்தல் முதலியவைகளால் பாசத்தொடர்வு நீத்துப் பரகதியடையச் செய்யுமாறெழுந்தருளிய சிவக்ஷேத்திரங்க ளனேகமிருப்பினும் அவைகள் யாவும் ஒருங்கமைந்துள்ளதாயும், அமுதவாரிதியனைய கங்கையை அருகுடைத்தாயும், மூவுலகத்தினு மொப்பற்றதாயும், எம்பெருமான் தேவியாரோடினிது வீற்றிருக்கும் ஸ்தல மாயும், விளங்குவது இக்காசியம்பதியே. கொலை, பொய், களவு, கள்ளருந்தல், குரு நிந்தனை யென்னும் பஞ்ச மாபாதகம் புரிந்துளரேனும் இம்மஹாக்ஷேத்திரத்திற்கு வந்து கங்கையிற் படிந்து தரிசித்தும் முறையே யாத்திரைகளைச் செய்து முடித்துக்கொண்டும் செல்வார்களேயாகில் சர்வபாவ நிவர்த்தியடைந்து இகபர சௌபாக்கியங்களையும் பெற்று ஜன்மசாபல்லிய மடைவது திண்ணம் என்பது நமது இந்து மதவேத சாஸ்திர புராணங்களின் சர்வசம்மத அபிப்பிராயமாகும்.

---

# காசியின் தற்கால ஸ்திதி.



இந்தப் புராதனமான காசிக்ஷேத்திரம் நேப்பாள ராச்சியத்தைச் சார்ந்த பாகங்களுக்குத் தெற்காயும், பண்டல் கண்டு நாட்டுக்கு வடக்காயும், ஐக்கியமாகாணத்தின் ஓர் முக்கிய ஜில்லாவாகவும் பத்துமைல் விஸ்தீரணத்தோடு கூடி நீர் வளம், நிலவளம் பொருந்திச்செழித்தும்,நாலாபக்கங்களிலும் அதி உன்னதமும் ரமணீயமான மா, பலா, கமுகு, முதலிய பல அழகிய விருக்ஷங்கள் அடர்ந்து சோபித்தும், சிறந்து விளங்கும் ஓர் உன்னதமான அழகிய பட்டணம். இந்த நகரத்தின்கண் பல பாஷைகள் பேசும் பிரஜைகள் நிறைந்திருப்பினும் இந்துஸ்தானி பாஷையே தாய் பாஷையாகக்கொண்டாடப் படுகின்றது. இந்த அதிரமணீயமான பட்டணத்தினுள் மேற்குப் பாகம் கண்டோன்மெண்டு (Cantonment) என்றும்,கிழக்குப் பாகம் ஸிடி(City) என்றும், இரண்டு பிரிவுகளாக வகுக்கப்பட்டிருக்கின்றது.—'ஸிற்றி' Cityஎன்ற பாகத்தில் பட்டணத்தின் கீழ்க்கரையில்—பக்த சிரோமணிகள் அருச்சிக்கின்ற புஷ்பங்களை ஆபரணமாகக்கொண்டும், விசாலமும்,கெம்பீரமுமான தோற்றத்தோடுஉத்தரவாகினியாக(பகீரதை) கங்கையானவள் ஓடிச்செல்லுகின்ற காட்சி மிகவும் தரிசிக்கத்தக்கதே. இந்த ஸிற்றி என்றபாகத்தில்தான் நம் இந்து மதாசாரங்களுக்குத் தக்க சகல வசதிகளு மமைந்துள்ளன. கங்கைக்கரை யோரத்தே 'அஸி' முதல் வருணைவரை அமைந்துள்ள அறுபத்து நான்கு ஸ்நானகட்டங்கள், ஆயிரக்கணக்



PHOTO காசிமா நகரம். BY K. S. MUTHIAH.

கான தேவாலயங்கள், அனேக பூசைமடங்கள், சிற்பத்திற் சிறந்த ரமணீயமான அநேக உப்பரிக்கை மேடைமாளிகை கள், சுதேச மன்னர்களாலும், மகாராணிகளாலும் ஏற்படுத் திய பல அன்னசத்திரங்கள், அனேக வேத பாடசாலைகள் முதலியன பிரகாசித்துக்கொண்டிருக்கின்றன. இவையன்றி பல ஆங்கில கலாசாலைகள், இந்து பாடசாலைகள், பட்டு பீதாம்பரங்கள், வெள்ளி, பித்தளை பாத்திரங்கள் விற்கும் கணக்கற்ற வர்த்தக சாலைகள், தபால் தந்தி ஆபீஸ்கள், அனேகவிதமான அபூர்வ கைத்தொழிற்சாலைகள் நிறைந்தி ருக்கின்றன. இப்பாகத்தில் (City) ஸிற்றியிலுள்ள வீடுகள் பெரும்பாலும் இரண்டு மூன்று மாடிகளுக்கு குறைவில்லாம லும், ஆறுஏழுமாடி வரையுள்ளனவாயும் இருங்கின்றன. வீதி கள் பெரும்பாலும் வளைந்து வளைந்து செல்லும் குறுகிய சந்து களாக விருக்கின்றன. கன்டோண்மெண்டு என்று சொல்லப் படும் பாகத்திற் கோர்ட்டுகள், கவர்ன்மெண்ட் அவுஸ்கள், ஐரோப்பியரின் வாசஸ்தலங்கள், ஆங்கில ஒட்டல்கள், இரா ணுவ வாசஸ்தலங்கள் முதலியன அடங்கியுள்ளன. இங் குள்ள ரோட்டுகள் அழகாயும் விசாலமாயும் இருக்கின்றன.

ஹா ! ஹா ! என்ன நேர்த்தி ! என்ன அற்புதம் ! இந்த மஹத்தான கங்கை நதியின் இக்கரையினின்று நோக்குவா ருக்குத்தோற்றும் காசிக்ஷேத்திரத்தின் அற்புதக்கண்காட்சி போல் வேறெங்கத்தேசத்து மிராது என்பது திண்ணம். வா னுற வோங்கி அழகாக விளங்கும் ஆலயங்களின் ஸ்தூபிகளு டைய அற்புதக்காட்சியை என்னென்று எடுத்துரைப்பது! கீழே கங்காநதியோரத்தே அற்புதமாக விளங்கும் படிக்கட்டுக ளில் நானு தேசங்களினின்று வந்திருக்கும் பிரஜாகோடிகள்

நிறைந்துநிற்கிறதையும், அவர்களைச்சூழ்ந்து அநேகபுரோகிதர்களும் பண்டாக்களும் கங்கா புத்திரர்களும் நிறைந்து கூட்டமாக நிற்கிறதையும், அவ்வகன்ற கங்கா நதியின் ஜலம் அவ்வுன்னத நகரத்தின் கட்டிடங்களின் மீது மோதிச் செல்லும் அற்புதக்காட்சியையும் ஒருவர் ஒருமுறை கண்டால் அப்புறம் ஆயுள் உள்ளவரையும் அது அவர் உள்ளத்தை விட்டகலாது. புராதன இந்திய கல்விக்கும், கைத்தொழிற்கும் இருப்பிடமாகிய இம்மஹா க்ஷேத்திரம் மூவாயிரம் வருஷங்களுக்கு முன் முதற்கொண்டே பிரசித்தியடைந்து வந்திருக்கின்றது. எப்போதும் தன் மாண்பு குன்றாத இம்மஹா க்ஷேத்திரத்தின் மாண்புகளை யெல்லாம் புராணங்களும் நன்குவிரிக்கின்றன. நம்புராதன நகரமாகிய ஸ்ரீ காசிக்ஷேத்திரம் ஆறு நூற்றாண்டுவரை அரசுபுரிந்த மகம்மதியர் ஆட்சியிலும் அழிவெய்தவில்லை. அக்காலத்திற் சில ஆலயங்களும் விக்கிரகங்களும் சிதைவுற்றது உண்மையேயாயினும், இந்து மார்க்கம் ஒரு சிறிதும் அழிவுறவே யில்லை. இம்மஹா க்ஷேத்திரம் முப்பது நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்த மேன்மையோடு இன்றுமிருந்து பிரகாசித்துக்கொண்டிருக்கின்றது. விசாலமான கங்கா நதியைக் கடந்து மஹத்தான காசியம்பதிக்குவர ஓர் அழகிய வாராவதியும் அமைக்கப்பெற்றிருக்கிறது. இதன் பெயர் டப்ரின் வாராவதி (Dufferin Bridge). அற்புதமாக அமையப்பெற்ற இந்த வாராவதி 1887-ஆவது வருடம் அக்டோபர்மீ 1உயில் கட்டிமுடிக்கப் பெற்றது. அப்போது நம்மிந்தியாவில் கவர்னர் ஜனரல் பதவியிலிருந்த மாட்சிமை தங்கிய லார்டு டப்ரின் (Lord Dufferin) பிரபு அவர்களால் திறக்கப்பட்டபடியால் மேற்படி வாராவதிக்கு இந்த பிரபுவின் நாமத்தை



PHOTO Kasi Ry, Station காசி ரயில்வே ஸ்டேஷன். BY K. S. MUTHIAH.

வைத்து அமைப்பதும் மிகப்பொருத்த முடையதே. இந்த அற்புத வாராவதி கட்டி முடிக்க மொத்தச் செலவு ரூ. 47,04,771. அழகும் விசாலமுமான இந்தவாராவதி பதினாறு கண்வாய்களோடு மிகப்பலமாய் அமைக்கப் பெற்றிருக்கின் றது. இதில் ஏழு கண்வாய்கள் ஒவ்வொன்றும் 331 அடி நீளமும், மற்றைய ஒன்பது கண்வாய்கள் ஒவ்வொன்றும் 103 அடி நீளமு மமையப்பெற்றிருக்கின்றன. இந்த வாராவதியின் மத்தியில் ரெயில் போகும்படியான விசாலமான ரோட்டும் அக்கம் பக்கங்களில் கால்நடைகளும், ஜனங்களும் யாதொரு வித பயமும், அபாயமுமின்றி சௌகரியமாய்ப் போய்வரும் படியான நடைபாதைகளும் அமைக்கப் பெற்றிருக்கின்றன. மேற்படி வாராவதியைக் கடந்து 100 அடி தூரஞ் சென் றால் காசி (Kashi) என்ற ரெயில்வே ஸ்டேஷன் அங்கு பிரகாசித்துக் கொண்டிருக்கிறதையும் பார்க்கலாம்.

காசி ஸ்டேஷன் (Kashi Station). இந்த மஹத்தான ஸ்டேஷனுக்கு வந்து விட்டோம். அன்னிய பாஷை பேசப் படும் இந்த ஸ்டேஷனில் வந்ததும் காணுவதெல்லாம் புதிய யாத்ரிகர்களுக்குப் புதுமையாகவே தோற்றப்படும். பழக்க மில்லாத ஒரு புதிய பட்டணம் சேர்ந்ததும் இம்மாதிரி தோ ன்றுவது சகஜமே. ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் கூலிகளின் உபத்திரவம் அதிகமாயிருக்கும். யாத்திரிகர் இந்த ஸ்டேஷ னுக்கு புதியவன், பாஷைதெரியாதவனென்று போர்டர்(கூலி காரன்) லகுவில் கண்டு கொள்வான். அதுவும் அதிக மூட்டை முடுச்சு உள்ளவர்களுக்கு அதிக தொந்தரவுதான். ஒன்றுக்கு மூன்றுபங்கு கூலிகேட்பான். துலைபயணம் வருகிற யாத்திரி கர் மிகவும் எச்சரிக்கையாக வருதலவசியம். காசி முதலிய

வடநாட்டிற்கு யாத்திரை வருகிறவர்களுக்கு கையில் பணம் தான் வேண்டும். சகலவிதமான சாமான்களும் வாங்கலாம். "எம்மை மதுரையில் ஒரு சினேகிதர் சந்தித்தார். எம்மிடம் காசியைப்பற்றியுள்ள விசேடங்களை விசாரித்து விட்டு, காசியில் நல்ல அரிசி, புளி, மிளகாய் கிடைக்காதாமே என்று ஆச்சரியத்தோடு கேட்டார். இந்த விஷயம் எவருக்கும் புதுமையாகவே தோன்றுமல்லவா? காசிக்கு வந்துபோனவர்களுக்கே காசியைப் பற்றிய விர்த்தாந்தம் நன்குதெரியா திருக்கையில் காசியைக் கனவிலும் பார்க்காதவர்கள் சில பொய்க்கதைகளைக் கேட்டு ஆச்சரியப்படுவது சகஜம் தான்.

இம்மாதிரிப் பொய்க்கதைகளை விசுவசித்து சில யாத்திரிகர்கள் எண்ணெய், நெய், அரிசி, புளி, மிளகாய் முதலிய சாமான்களைப் பெரிய மூட்டையாகக் கட்டிச் சுமந்து ரயிலுக்கும், கூலிகாரனுக்கும் கூலிகொடுத்து ரொம்ப அவஸ்தைப் படுகிறதை பலதடவை நேரில் பார்த்திருக்கிறேன். காசியில் கிடைக்கக் கூடிய சகலவிதமான சாமான்களும் வேறெந்த நாட்டிலும் கிடைக்காதென்றே சொல்லலாம். ஆகையால் யாத்திரிகர்கள் மூட்டை முடிச்சுகளைக் கூடியவரை குறைத்துக் கொண்டால் சௌகரியமாக விருக்கும். ஸ்டேஷன் பிளேட் பாரத்தில் வந்ததும் கதை வளர்ந்து விட்டது. இனிச்செல்வோம்.

ஸ்டேஷன் பிளேட் பாரம் விட்டு வெளிவந்ததும் யாத்திரிகன் மனதுக்கு அதிகக் குழப்பமாகப் புலப்படும். அதாவது அங்கு பணப்பேய்பிடித்த வண்டிக்காரன், கங்காபுத்திரன் பண்டா, டாணிக்காரன் என்ற வகுப்பாரின் கூட்டம்

யாத்திரிகனுக்கு அதிக தொந்தரவாகவே இருக்கும்-வண்டிக் காரன்கள்வந்து யாத்திரிகனை என் வண்டியிலேறுங்கள், என் வண்டியிலேறுங்கள் என்று தொந்தரிப்பதும்; கங்காபுத்தி ரன் என்ஜாகைக்கு வாருங்கள், உங்கள் பாட்டா, பாட்டி எங் கள் ஜாகையில்வந்து தாமதித்துப் போயிருக்கிறார்கள். இதோ பாருங்கள் மானபத்திரம் தந்திருக்கிறார்கள் என்று தம் கா யித மூட்டைகளை அவிழ்த்துக் காட்டுவதும், டாணிக்காரன், ஐயா நாங்கள் தமிழ் நாட்டார், அந்த இந்துஸ்தானிக்காரன் கூட போகாதீர்கள் எங்கள் ஜாகைக்கு வந்தால் உங்களுக்கு அதிக வசதிசெய்து தருவோம் என்று கத்துவதும் இப்படிப் பலவாறாக ஏற்படும் தொந்தரவைக் கடந்து யாத்திரிகர் முடி வில் வண்டியை ஏறிட்டுப்பார்ப்பார். அங்கு ஒற்றைக் குதிரை கட்டிய எக்கா என்ற பெயருடைய வண்டியும், இரட்டைக் குதிரை கட்டிய "கோச்" என்ற வண்டியும் காணப்படும். வண்டியின் அழகு முதலியவற்றை இங்கு எழுதிக்கொண்டு போனால் மிகவும் விரிவாகும். இவைகளை யாத்திரிகர் நேரில் பார்த்துக்கொள்வது உத்தமம்:—இனி வண்டிக்காரன் வண்டி வாடகை என்னகேட்கிறான் என்று கவனிப்போம். வழக்க மாக ஏற்பட்டவாடகை காசி ஸ்டேஷனிலிருந்து சவுக் பஜார், தசாச்வமேத கட்டம், அனுமார் கட்டம் முதலிய இடங்க ளுக்கு முதலில் சொன்ன 'எக்கா' வண்டிக்கு 6 அணா முதல் 8 அணாவும் 'கோச்' வண்டிக்கு 12 அணா முதல் ரூ. 1-ம் கொடுக்கவேண்டும். ஆனால் வண்டிக்காரன் கேட்பது வோ ஒன்றுக்கு இரண்டாகத்தானிருக்கும். சில சமயம் ஒன் றுக்கு நாலுகேட்பதுமுண்டு. வண்டிக்குக் கூலி பேசி முடிப் பது யாத்திரிகரின் சாமர்த்தியத்தைப் பொறுத்திருக்கிறது.

யாத்ரிகர் ஸ்டேஷனைக் கடந்து வண்டியில் உட்கார்ந்து வண்டி ஓடவாரம்பித்து விட்டது என்று வைத்துக்கொள்வோம். 100-அடி தூரம் வண்டி போனதும் அங்கு ஒரு மனிதன் வண்டியை நிற்பாட்டும்படி சொல்லுகிறான். இவன் யார் என்று யாத்திரிகருக்கு விளங்கவில்லை. யாத்திரிகர் பிரமிக்கிறார். ஆனால் வண்டியின் பின்னோடு விடாது தொடர்கிற டாணிக்காரனால் (டாணிக்காரன்—என்பது யாத்திரிகர்களை தம் ஜாகையில் தாமசிக்கச்செய்து வைதிக காரியங்களுக்குக்கூட விருந்து நடப்பித்துக்கொடுத்து சம்பாதிக்கிறவன். இவனைத் தரகன் என்றும் சொல்லலாம்-- இவன் தமிழன், அல்லது தெலுங்கன், அல்லது மலையாளி வகுப்பைச் சேர்ந்தவனாக இருக்கலாம்) சுங்கம் வசூலிக்கும் ஆபீஸ் பியூன் என்றுயாத்திரிகர் தெரிந்து கொள்கிறார். யாத்திரிகரிடம் தீர்வை கட்டும் படியான புதிய வஸ்துக்களிருந்தால் தீர்வை கொடுக்க ஏற்படும். தீர்வை கட்டும்படியான வஸ்து இல்லாவிட்டால் விட்டுவிடுவார்கள். உடனே வண்டி ஓடவாரம்பிக்கும். காசி பட்டணமும் வந்துவிட்டோம். இனி யாத்திரிகர் முக்கியமாய்க் கவனிக்க வேண்டியது என்ன? எங்கு தாமதிப்பது. இதுதான் முக்கிய கேள்வி. இதைப்பற்றிக் கொஞ்சம் விவரமாய்ச் சொல்வது யாத்திரிகருக்கு மெத்த உதவியாக விருக்குமென்பது எமது கருத்து.

---

## காசியில் எங்கு தாமசிப்பது ?

---

காசியில் இரண்டு ரயில்வே ஸ்டேஷன்களுண்டு. 1. காசி Kashi. 2. பனாரஸ் கண்டோன்மெண்டு Benares Cantt., இந்த இரண்டு ஸ்டேஷன்களில் யாத்திரிகர்கள் அநேகமாய் காசி என்ற ஸ்டேஷனில்தான் இறங்குகிறது வழக்கம். இது தான் சமீபத்திலுள்ள ஸ்டேஷன். இந்த ஸ்டேஷனில் தான் யாத்திரிகர்களை, டாணிக்காரன், கங்காபுத்திரன், பண்டா என்ற வகுப்பார் சந்திக்கிறதாய் முன் சொல்லி யுள்ளேன். காசி ஸ்டேஷனிலிருந்து நகருக்குள் வரும் ரோட்டின் வட பக்கம் அதாவது ஸ்டேஷனிலிருந்து $\frac{1}{4}$ பர்லாங்கு தூரத்தில் ஒரு தர்மசாலை (சத்திரம்) இருக்கிறது. இது வசதியுள்ளது தான். ஆனால் ஸ்நான கட்டம் விச்வேச்வா சந்நிதி முதலிய வைகள் பட்டணத்துக்குள்ளிருப்பதால் இந்த தர்ம சாலையில் யாத்திரிகர் தாமசிக்கப் பிரியப்படார். இதன்றி நகரின்கண் ஞானவாவி என்ற இடத்துக்குச் சமீபத்தில் ஓர் மார்வாடிப் பிரபுவால் கட்டப்பட்ட சகலவசதிகளுக்கும் இடமாகிய சத்திரம் (தர்மசாலை) ஒன்றுளது. இந்தச் சத்திரம் மதராஸில் (Madras) ஸர் சவலை இராமசாமி முதலியாரின் தர்ம சத்திரத்தைப்போன்ற சகல வசதிகளையு முடையது. இந்தச் சத்திரத்துக்கு தென்பக்கம் ஆதியில் விச்வேச்வராலய மிருந்து இப்பொழுது மகமதியரின் மசூதியாகக் காணப்படுகிறது.

இதிலிருந்து தெற்கே 100 அடி தூரத்தில் இப்போது வழங்கப்படும் ஸ்ரீவிச்வேச்வராலயமிருக்கிறது. மேற்குறித்த சத்திரங்களைத் தவிர டாலிக்காரன் ஜாகைகளில் யாத்திரிகர் பிரியப்பட்டால் தாமசிக்கலாம். ஆனால் மேற்படியான் பணப் பேய் பிடித்தவன் என்று யாத்திரிகன் தெரிந்துகொள்ளாது அன்னவர் வலையில் யாத்திரிகர்கள் அகப்படாமலிருப்பதுஉத் தமம். மதிமோசமாய் அன்னவரின் இனிய வசனத்தில் அகப் பட்டுக் கொண்டால் சமர்த்தராயிருந்து கொள்ள வேண்டிய தவசியம்.

இது வன்றித் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த மடமும், திருப்பனந்தாள் ஆதினத்தைச் சேர்ந்த மடமும் வேறு சில மடங்களுமுண்டு. இந்த மடங்களில் யாத்திரிகர் ஜாகை வைத்துக்கொள்ள விரும்பினால், யாத்திரிகர் தென் னாட்டில் செல்வாக்குள்ளவராகவும், பணத்தை லக்ஷியம் செய்யாது செலவு செய்யக்கூடிய நிலைமையிலுமிருந்தால் தாராளமாக மடத்தில் ஜாகைகிடைக்கும். யாத்திரிகர் செலவு செய்ய ஏலாத நிலைமையும் ஏழையுமாக இருந்தால் மடத் தின் ஜாகைக்கு ஆசை வைக்கவேண்டாம்.

---

## நகர சத்திரம்.

---

இந்த சத்திரம் நாட்டுக்கோட்டை நகரத்தாரால் ஸ்தா பிக்கப்பட்டுள்ளது. இது தம்இனத்தவர் காசிக்கு யாத்திரை வந்தால் ஜாகைக்கு கஷ்டப்படாது தாமசிக்க வேண்டி நகரத் தாரின் பொதுபண்டில் ஸ்தாபனம்செய்து நன்கு பரிபாலிக்

கப்பட்டு வருகின்றது. ஆனால் நகரத்தாரல்லாத மற்றவர்கட்கு இங்கு தாமசிக்க அனுமதி கிடையாது. நகரத்தாரில் பெரிய விலாசத்தார்களின் சிபார்சு லெட்டருடன் வருகிறவர்களுக்கு மாத்திரம் சில சமயம் ஜாகை கொடுக்கிறார்கள். மற்றைய பொதுஜனங்கள் இங்கு ஜாகை எதிர்பார்க்கமுடியாது. அந்தணர்களுக்கு பிரதிதினமும் தவறாது அன்னமளித்து வருகிறார்கள். தர்ம ஸ்தாபனங்கள் ஏற்படுத்தி நடத்தும் ஊக்கமும், ஒற்றுமையும், ஏற்படுத்திய தர்ம ஸ்தாபனங்களை வழுவின்றி செவ்வனே நடத்தும் சமர்த்தும் நாட்டுக்கோட்டை நகரத்தாரிடம் இயற்கையாக அமைந்துள்ளது. இது பெரிதும் பாராட்டத்தக்கது. இன்னவரால் குமரிமுதல் இமயமலை வரை கணக்கற்ற தர்ம ஸ்தாபனங்கள் நகரப்பொதுவிலும், தனிமையாகவும் ஏற்படுத்தப்பட்டு செவ்வனே நடந்தேறி வருகின்றன. தர்மகைங்கரியத்தில் ஊக்கத்திலும், ஒற்றுமையிலும் இன்னவருக்கிணையாக எவரையும் ஒப்பிடமுடியாதென்றே சொல்லலாம். மற்றய வகுப்பார் இன்னவரைப் பின்பற்றியாவது கற்றுக்கொள்ளாதிருப்பது மிகவும் விசனிக்கத் தக்கதே.

## யாத்திரை விவரங்கள்.

காசிக்கு யாத்திரையாய் வருகிறவர்கள் காசியில் செய்ய வேண்டிய யாத்திரைத் தரிசனங்கள் வடமொழியில் இருக்கும் மதநூல்களில் விரிவாய்ச்சொல்லியிருக்கிறபடி (1) நித்திய யாத்திரை. (2) பஞ்சக் குரோச யாத்திரை. (3) அஷ்ட வைரவர் யாத்திரை. (4) அறுபத்துநாலு யோகினி யாத்திரை (5) சப்தாவரண விநாயகர் யாத்திரை. (6) சப்தப் பிரகாரத்துக்

கும் மத்தியிலுள்ள விநாயகர் யாத்திரை. (6) திதிவாரயோகங்களிற் செய்யும் யாத்திரை. (8) ஏகாதச மகாருத்திர யாத்திரை. (9) அந்தரக் கிரக யாத்திரை. (10) சப்தரிஷி யாத்திரை (11) சைலேச்வரர் முதல் பதினுலு ஸ்தல யாத்திரை. (12) துவாதசாதித்ய யாத்திரை. (13) சப்தபுரி யாத்திரை. (14) ஓங்காரேச்வரர் முதல் பதினுலு ஸ்தல யாத்திரை.(15) அஷ்டமகாலிங்க யாத்திரை. (16) அமிர்தேச்வரர் முதல் பதினுலு ஸ்தல யாத்திரை. (17) காசியம்பதியில் தென்திக்கிற் செய்யும் யாத்திரை. (18) நவகௌரி யாத்திரை. 19. நவதுர்க்கை யாத்திரை. (20) காசியம்பதியில் வடதிக்கு யாத்திரை (21) பஞ்ச தீர்த்த யாத்திரை. (22) மாதந்தோறும் திதிகளிற் செய்ய வேண்டிய யாத்திரை. (23) வாரயாத்திரை. (24) யோக யாத்திரை, இவ்வாறு இருபத்து நான்கு யாத்திரைகள் சொல்லப் பட்டிருக்கின்றன.

ஆனுல் மேல் குறித்த 24 வகை யாத்திரைகளையும் முறையே தரிசித்துப் போவதென்ருல் குறைந்தது பத்துமாதகாலம் பிடிக்கும். இது யாத்திரிகர்களுக்குச் சௌகரியப்படாதென்றே சொல்லலாம். அநேகமாய் இங்கு யாத்திரை வருகிறவர்கள் மூன்று நாள் அல்லது எட்டு நாட்களுக்கு மேல் தாமசிக்கிறதுமில்லை. அதிகப் பணம் செலவு செய்து வந்தவர்கள் யாத்திரைகள் பூரா முடிக்கவும், பட்டணம் சுற்றிப் பார்க்கவும், மற்றக்காட்சிகளைக் கண்டு களிக்கவும் அபூர்வ சாமான்கள் வாங்கவும் ஆசைப்படுவது இயல்பு. யாத்திரிகர் தாமசிக்க உத்தேசிக்கும் குறுயஞு நாட்களில் தற்கால வழக்கப்படி யாத்திரைகளை முடித்துக்



கணபதி சுவாமிகள்.



PHOTO ஹரபார்வதி. BY K. S. MUTHIAH.

கொண்டும், பட்டணத்தின் முக்கிய இடங்களைப் பார்த்துக் கொண்டும் சௌகரியத் தோடு திரும்பவேண்டிய விவரங் களை மாத்திரம் இங்கு விவரித்து எழுதுவது யாத் திரிகர்களுக்கு மிக்க பயன்படு மெனக்கருதி இதன் கீழ் சொல்லப்பட்டிருக்கிறது.



# முக்கிய யாத்திரைகள் மூன்று.

1. நித்திய யாத்திரை 2. பஞ்சதீர்த்த யாத்திரை,
3. பஞ்சக்குரோச யாத்திரை.

## 1. நித்திய யாத்திரையின் விவரம்.

சுலோகம்

'விச்வேசம்-மாதவம்-துண்டிம்
தெண்ட பாணிஞ்ச பைரவம்
வந்தே காசி குஹாங் கங்கா
பவானி-மணிகர்ணிகா."

அருணோதயத்திற் கைந்து நாழிகைக்கு முன்னதாக வே துயிலெழுந்து கங்காநதியின் மணிகர்ணிகா கட்டத்திற் போய் ஸ்நானஞ் செய்து முடித்துக்கொண்டு ஸ்ரீ விச்வேச்வ ராலயத்தின் சமீபத்தில் வடபக்கமுள்ள ஞானவாவிக்குச் சென்று அங்குள்ள வேதியர்களால் சங்கற்பஞ் சொல்லக் கேட்டுக் கொண்டு முறையே 1. ஸ்ரீ விச்வேச்ரர் சந்நிதி, 2. விந்து மாதவர் (விஷ்ணு) சந்நிதி, 3 துண்டிராஜ கணபதி சந்நிதி.—இந்த சந்நிதியில் பிரசாதமாகக் காசிக்கயிறு என்ற கறுப்புக் கங்கணம் கையில் கட்டிக்கொள்வது. 6. காசி தேவி (வந்தே காசி) சந்நிதி, 7. குஹாம் (குகை), 8. கங்கா என்ற தடாகம்-இங்கு புரோச்சனம்; இந்த கங்கா என்ற

தடாகம் பகிரதன் கங்கை வருமுன்னரே இருக்கிறதாய்ச் சொல்லத் தெரிகிறது. 9. பவானி என்ற அன்னபூரணி அம்பிகை சந்நிதி முதலிய ஒன்பது ஸ்தானங்களேயும் மத்தியான காலத்திற்குள் தரிசித்துக்கொண்டு திரும்பவும் மணிகர்ணிகா கட்டம் வந்து ஸ்நானஞ்செய்து ஸ்ரீ விச்வேச்வரர் சந்நிதியில் போய் தரிசிக்க. இத்துடன் நித்திய யாத்திரை முடிவாகின்றது.

## பஞ்சதீர்த்த யாத்திரை.

இந்த யாத்திரை எந்த மாதங்களிலும், நாட்களிலும் செய்யலாம். இதன் பலன் சாரூப்ய பதவியடைதல்.

கங்காநதியின் ஓரத்தில் 64 நாமங்களுள்ள ஸ்நான கட்டங்களிருப்பினும், யாத்திரை வாசிகள் இந்த 64 கட்டங்களிலும் போய் ஸ்நானஞ் செய்வதென்றால் முடியாத காரியம். குறித்த 64 ஸ்நான கட்டங்களில் அனேக கட்டங்கள் உருத்தெரியாது க்ஷீணித்து ஜனங்கள் போக்கு வரத்துக்குக் கூட கொஞ்சமும் உபயோகமில்லாது பழுதாயும் போய் விட்டன. ஆகையால் இந்த அறுபத்துநான்கு ஸ்நான கட்டங்களிலும் ஸ்நானஞ் செய்து முழுப்பலனேயும் அடைவதற்குரிய பலப் பிராப்திகளே அடையக்கூடியதானதும் தற்கால வழக்கத்திலே விசேஷமாகக் கொண்டாடி வருகிறதும் சாஸ்திர யுக்தமாயும், பண்டிதர்களின் அபிப்பிராயத்தை அநுசரித்ததுமான முக்கிய ஸ்நான கட்டங்கள் ஐந்தேயாகும். அவைகளில் :—

**முதலாவது அஸி சங்கம கட்டம் :—**இந்த கட்டத்தில் அஸி என்ற கிளைநதி மகத்தான கங்கையோடு வந்து சங்கம

மாகிற விடம். ஆகையால் இந்த கட்டத்திற்கு 'அஸி சங்கங்கம கட்டம்' என்று காரணப்பெயர் உண்டாயிற்று; கங்கையின் தெற்கிலுள்ள கடைசியான ஸ்நான கட்டமு மிதுவே. இந்தப் புண்ணிய கட்டத்தில் பணிவோடு ஸ்நானம் செய்து இங்குள்ள சங்கமேச்வரர், மாதவர், த்ரிவிக்ரமர், லோலார்க்கர், அர்க்கர் விநாயகர், முதலிய திவ்விய மூர்த்திகளை அன்போடு தரிசித்தல் வேண்டும்.

இரண்டாவது தசாச்வ மேத கட்டம் :—இந்த மகத்தான கட்டத்தில் சதுர்முக பிரம்மா சிவபிரானுடைய திவ்விய அநுக்கிரகத்தைப் பெற்று (தசம்-பத்து, அச்வம்-குதிரை) தசாச்வ மேதமென்ற யாகஞ் யெய்து முடித்தமையால் இக்காரணப்பெயர் உண்டாயிற்று. இங்கு ஸ்நானஞ் செய்து இங்குள்ள தசாச்வமேதேச்வரர், வந்திதேவி, சூலடங்கேச்வரர், ஆதிவராகேச்வரர், க்ஷேமேச்வரர், தாலப்பியேச்வரர், பிரயாகை மாதவர், சிதளாதேவி, முதலிய திவ்விய மூர்த்திகளை வழியோடு வணங்குக.

மூன்றாவது வருணை சங்கம கட்டம் :—இங்கு கங்காநதியோடு வருணை என்ற கிளைநதி வந்து சங்கமமாகின்றபடியால் இக்காரணப் பெயருண்டாயிற்று. கங்கா நதியின் வடக்கிலுள்ள கடைசியான ஸ்நான கட்டமு மிதுவே. இச்சங்கமத்தில் ஸ்நானஞ் செய்து வருணை தீர்த்தேச்வரர், ஆதிகேசவர், சங்கமேச்வரர், கர்வவிநாயகர், மேசவாதித்தியர், சுவேத தீபதீர்த்தேச்வரர், ஞானகேசவர், நக்ஷத்திரேச்வரர், வேதேச்வரர், முதலிய அற்புத மூர்த்திகளை ஒழுங்கே வழிபடுக.

நான்காவது பஞ்ச கங்கா கட்டம் :— இந்த கட்டம் ஒரு காலத்தில் கிரணை, கங்கை, யமுனை, சரஸ்வதி, தூத பாவை என்ற ஐந்து புண்ணிய நதிகளும் ஒன்றாகச் சந்தித்த விடமென்றும், இப்போதும் அவை அந்தர்வாகினியாக வந்து சேருகின்றன வென்றும், இதுபற்றியே இந்த கட்டத் துக்கு பஞ்சகங்கா கட்டமென்ற காரணப்பெயர் உண்டாயிற் றென்றும் தெரிகிறது.

இந்துஸ்தானியில் (பாஞ்ச்-ஐந்து). இந்த புண்ணிய கட் டத்தில் ஸ்நானஞ் செய்யின் பஞ்சபூத பௌதிகமான சரீரத் தைப்போக்கித் தேஜோமயமான திவ்விய சரீரத்தைக் கொ டுக்கின்ற விசேஷ பலன் அடையக்கூடுமென்பது திண்ணம். இந்த மகத்தான ஸ்நானம் நிரம்ப விசேடமாகக் கொண்டா டப்படுகின்றது. இதில் ஸ்நானஞ் செய்து இங்குள்ள விந்து மாதவர், கபர்த்தீச்வரர், மங்களகௌரி, முதலிய சந்நிதி களைத் தரிசிக்கவேண்டும்.

ஐந்தாவது மணிகர்ணிகா (மணி—கர்ணிகை) கட் டம் :—(மணி-இரத்தினம், கர்ணம்-காது) சிவபிரானுடைய காதின் குண்டலம் இவ்விடத்தில் நழுவி விழுந்தமையால் இக்காரணப் பெயர் உண்டாயிற்றாம். இந்த மகத்தான ஸ்நானகட்டத்தில் பணிவோடு ஸ்நானஞ் செய்து இங் குள்ள மணிகர்ணிகேச்வரர், சித்திவிநாயகர் முதலிய மூர்த்தி களைத் தரிசித்தல் வேண்டும்.

இந்தக் கட்டத்தின் சமீபத்தில் தான் மஹாமசானம்.

## 3. பஞ்சக் குரோச யாத்திரை.

* பதியெனப்படு மெமக்கினி தாகிய பதியாய்க்
கதிய ளித்திடும் காசியைங் குரோசமுஞ் சூழ
மதிபு ரைத்திடி னைப்பசி கார்த்திகை வயக்கம்
பொதியு மார்கழி யாயவிம் மூன்றுமே பொருந்தும்.

* மாசி பங்குனி சித்திரா மற்றவை காசி
யாசி சேருமித் திங்களும் பொருந்துமச் செயலை
நேசி யாவெழு தலைச்செயு நாட்டுமுன் னிகழ் நாள்
வீசி மோதகந் துண்டிமால் களிற்றினை விழைந்து.

பதிப்பொருளென்று வேதங்களாலுரைக்கத் தக்கதும் நமக்கு இன்பமாகிய ஸ்தலமாயும் மோக்ஷத்தைக் கொடுப்பதாகவுமுள்ள இம்மகத்தான காசியம்பதியில் பஞ்சக்குரோசப் பிரதக்ஷணம் செய்கின்ற மாதங்களைச் சொல்லுமிடத்து விளக்கமமைந்த ஐப்பசி, கார்த்திகை, மார்கழி ஆகிய விம்மூன்று திங்களே (மாதங்கள்) தகுதியாகும். இம்மாதங்களன்றி மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி இந்த மாதங்களிலும் செய்யலாம். இந்தப் பிரதக்ஷணத்தை உத்தேசித்துச் செய்கின்ற தினத்திற்கு முன்னாளில் சர்வகாரிய சித்தியை அளிக்கக்கூடியவரான பெருமை பொருந்திய துண்டிராஜ கணபதிக்கு விருப்போடு மோதக நிவேதனஞ் செய்து வணங்கி அன்றையதினம் அவிசு போஜனஞ் செய்து சயனித்தலவசியம். மற்ற நாள் அருணோதயத்திற்கு முன்பே உத்தரவாகினியாகச் செல்லுகின்ற மகிமையுள்ள கங்கா

---

* காசி ரகசியம்.

தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து ஸ்ரீ விச்வேச்வரப் பெருமானையும், அருட்சோதிவடிவாகிய அன்னபூரணி, விசாலாக்ஷி அம்பிகையையும் தரிசித்துக்கொண்டு, மனோவருத்தத்தையொழித்துத் தரிசித்தோருக் கருளைத் தருகின்ற முத்தி மண்டபத்தைச் சேர்ந்து, தடுத்தற்கரிய மனம், வாக்குக்காயமென்னும் மூன்று கரணத்தினாலும், கொடிய பாதகங்களை அபுத்திபூர்வமாகச் செய்திருப்பினும், புத்தி பூர்வமாகச் செய்திருப்பினும் அவைகள் அடியேனை அணுகாதிருக்கும்படி யருள் செய்யவேண்டுமென்று தியானித்துக்கொண்டு, விக்கினம் வராது பெருமையோடு பாதுகாக்கின்ற சங்கற்பத்தை முறையே அங்குள்ள வேதியர்களால் சொல்லக் கேட்டுக்கொண்டும், ஏழைகளுக்குத் தம்மாலியன்ற தர்மங்களைச் செய்தும் அலங்காரமமைந்த இப்புண்ணிய பூமியாகிய காசியம்பதியில் பஞ்சக்குரோச பிரதக்ஷணம் செய்க. ஏ! கருணைக்கடல் வள்ளலே! சோதிவடிவமாக வியாபித்து விளங்கா நின்ற இலிங்கமூர்த்தியே! அடியேன் உமது திருவருளை முன்னிட்டு பஞ்சக்குரோச யாத்திரை செய்யப்போகின்றேன். எமது யாத்திரைக்கு பின்னம் வராது பூரணமடையத் திருவருள் புரிவாயெனப்பிரார்த்தித்துக்கொண்டும், அறிவுடையோரால் சிந்திக்கத்தக்க துண்டிராஜ கணபதி முதலாகிய ஐம்பத்தாறு விநாயகமூர்த்திகளும், பெரும்போர் செய்து அச்சத்தை உண்டாக்குதற்கு முதல்வனாகிய சூரனைக்கொன்ற முருகக்கடவுளும், வயிரவக்கடவுளும், கல்லால விருக்ஷத்தின் அடியிற்றங்கிய தக்ஷிணாமூர்த்தியும், சந்திர சேகரரும், அச்சத்தைத் தருகின்ற சூலாயுதம் விளங்கிய கையையுடைய உருத்திர கணங்களும்,

அன்னவாகனத்தை நடத்துகின்ற பிரமதேவனும், விஷ்ணு வின் தசாவதார மூர்த்திகளும், சந்திரமூர்த்தியும், சொல்வ தற்கரிய கிரணங்களை விரிக்கின்ற தாத்துரு முதலிய பன் னிரண்டு சூரியர்களும், நன்மையை விரும்பிய கௌரி முத லாகிய ஸ்ப்த மாதர்களும், மற்றையர்களும் பிரியாது தினந் தோறும் சூழ்ந்திருக்கக்கூடிய காசியம்பதியில் எழுந்தருளி யிருக்கின்ற ஸ்ரீ விச்வேச்வரரையும் அன்னபூரணி அம்பிகை யையும் முன்னே பிரதக்ஷணஞ் செய்து பேரன்பினுல் பரவச மடைந்து அனுமதி பெற்றுக்கொண்டு அகங்காரம் நீங்கும் படி இருகரங்களையுஞ் சிரமேற் குவித்துத் தரிசித்தும், ண் டபாணி பைரவக்கடவுள் முதலிய மூர்த்திகளைத் தரிசித்துக் கொண்டு கடஸ்தமாய் சமுத்திரம் போல் புஷ்பவகைகளால் நிறைந்தும் உத்தரவாகினியாய்க் கெம்பீரமான தோற்றத் தோடும் ஓடிக்கொண்டிருக்கின்ற மகத்தான கங்காநதியின் (மணிகர்ணிகா) மணிகர்ணிகா ஸ்நான கட்டத்தில் திரும்பவும் போய் ஸ்நானஞ் செய்துகொண்டு அங்குள்ள மணிகர்ணிகேச்வரர், சித்திவிநாயகர் முதலிய மூர்த்திகளைத் தரிசித்துக் கொண்டு கங்கைக்கரை வழியே காசியம்பதி யைக்கடந்து தெற்கு நோக்கிச் செல்லுக.

---

## முதல் நாள் தங்குமிடம்

## கர்த்தமகேச்வரம்,

---

* முதனுட் கருத்தமேசுரத்தை முற்றி யமர்க விரண்டா
ளிதமார் வீம சண்டியகத் திருக்க மூன்று நாளடைந்து
பதமா ரிராமே சுரத்தமர்க பற்று நாலா நாளுறவச்
சுதமார் கபில தாரையிடத் துன்ன வைந்தா நாட்காசி.

கர்த்தமகேச்வரம் செல்லும் வழியில் தரிசிக்கவேண்டிய மூர்த்திகள்:—லளிதா கட்டத்தில்—பரிசுத்தமுள்ள கங்கேச்வரர். கருணை நிறைந்த லளிதாதேவி, மீர்க்கட்டத்தில்—சரச் சந்தேச்வரர்; மான்மந்திர கட்டத்தில்—சோமேச்வரர், தாலப்யேச்வரர்; தசாச்வமேத கட்டத்தில்—சூலடங்கேச்வரர், தசாச்வமேதேச்வரர், ஆதிவராகேச்வரர், வந்திதேவி; பாடே கட்டத்தில்—சர்வேச்வரர்; கேதார கட்டத்தில்—துன்பங்களை யொழித்தருள்கின்ற கேதாரநாதர்; அனுமந்த கட்டத்தில்—அனுமந்தேச்வரர், லோலார்க்கேச்வரர், அர்க்க விநாயகர்; அஸிசங்கமத்திலுள்ள சங்கமேச்வரர் முதலான மூர்த்திகளையும் பரிசுத்தமுள்ள புட்பம் முதலிய உபகார திரவியங்களால் பூஜை செய்துகொண்டும் துர்க்காகுண்ட தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து துர்க்காதேவி, துர்க்கை விநாயகர் முதலிய மூர்த்திகளையும் விதிப்படி பூஜை செய்து தரிசித்துக்கொண்டு மார்க்கத்திலுள்ள விச்வக்ஷேனேச்வரரைத் தரிசித்துக்கொண்டு கர்த்தமகேசுரத்தில் போய் அன்

---

* காசி ரகசியம்.

திரவு வசிக்கவும். இந்த கர்த்தமகேசுரம் என்ற சிறுகிராமம் ஓர் அழகிய பூங்காவனம் போன்ற மிகுவசதியுள்ள சோலைப் புறம்; இங்கு யாத்திரிகர்கள் தங்குவதற்கும், சமையல் சாப்பாடு செய்துகொள்வதற்கும் வசதியுள்ள பல தர்ம சாலைகளும், மடங்களுமுண்டு; சகல சாமக்கிரியைகளும் விற்கின்றன.

---

## இரண்டாவது நாள் தங்குமிடம் இன்பம் நிறைந்த வீம சண்டி.

---

முதல் நாளிரவு தங்கிய கர்த்த மஹேச்வரத்திலுள்ள புண்ணியவடிவமாகிய கர்த்தம தீர்த்தத்தில் ஸ்நாஞ் செய்து விரும்பத்தக்க கர்த்தமஹேச்வரரை அர்ச்சித்து வணங்கிக் கொண்டு, கர்த்தகூபமென்னும் மகத்தான கிணற்றையும் தரிசித்துக்கொண்டும் அவ்விடத்தில் சிரார்த்தம், ஓமம் முதலியன செய்து முடித்துக்கொண்டும் பிரியத்துடன் வீற்றிருக்கின்ற ஏ! கர்த்தமஹேச்வரரே! அடியேனுடை யாத்திரைக்கு யாதொரு பங்கம் வராது அருள்புரிகவெனப் பிரார்த்தித்துக்கொண்டு செல்க. பரிசுத்தமுள்ள பிராதகாமமென்னுந் தீர்த்தத்திற்குப் போய் ஸ்நானஞ்செய்து கணநாதரையும், சாமுண்டிதேவி, மோக்ஷேச்வரர், கருணேச்வரர், பற்திரேச்வரர், விகடதேவி, உன்மத்தவைரவர், நீலேச்வரர், காலகூடேச்வரர், விமலாதேவி, நந்திகேச்வரர், பிருங்கீச்வரர், முதலிய மூர்த்திகளைப் பணிவோடு தரிசித்துக் கொண்டு கந்தருவசாகர தீர்த்தத்தைக் கடந்து, வீமசண்டிக்குபோய்



PHOTO காசி, பஞ்சகங்காகாட் அல்லது வேணி மாதவர் கட்டம். BY K. S. MUTHIAH

வீமசண்டி தீர்த்தத்தில் மூழ்கி சண்டி விநாயகர், சூரியதேவர் கந்தருவேச்வரர் நேமவீசர், இராமேசர், இரத்தாக்ஷீச்வரர் முதலிய மூர்த்திகளை வணங்கி பூஜை செய்துகொண்டு அன் றிரவு அங்கு தங்குக. இங்கும் யாத்திரிகர்கள் தங்க சகல வசதிகளுமுண்டு.

---

## மூன்றாவது நாள் தங்குமிடம்

## இராமேச்வரம்.

இரண்டாவது நாள் தங்கிய வீமசண்டியை விட்டு எழுந்து, ஏகபாத விநாயகர், மஹா வீமேச்வரர், வயிரநாதர், வயிரவிதேவி, பூதநாதர், சோமேச்வரர், காலநாதர், கவர்த் தீச்வரர், காமேச்வரர், சுந்தரகணேசர், பத்திரேசர், அருட் கணேசர், முதலிய மூர்த்திகளை பக்தியோடு பூஜைகள் யாவும் விதிவழியாக விளங்கச் செய்து மாட்சிமையுள்ள தெகளி விநாயகருக்கு உயர்ந்த கரும்பு, மோதகம், அவல் முதலான வைகளை நிறையாக வைத்து நிவேதித்து அவ்விநாயகர் சமீப த்திலுள்ள பதினாறு கணேசர்களையும் வணக்கத்தோடு தரி சித்துக் கொண்டு, வணங்கித்துதிக்கத்தக்க பார்வதி தேவி யார் தவஞ்செய்த விடமென்று சொல்லுதற்குரிய வியாபித்த புகழையுடைய இராமேச்வரத்தை யடைந்து அவ்விடத்தே யுள்ள, களங்கத்தை நீக்கத்தக்க தீர்த்தத்தில் களிப்புடன் மூழ்கி உறுதியைத் தரத்தக்க பிண்டப் பிரதானத்தையுஞ் சிரார்த்தத்தையுஞ் செய்து சோமநாதரை வெல்லம், எள், வில்வம் முதலிய வஸ்துக்களால் பூசித்தும், ஐராவதேசுரரை யும், தேன்றுளிக்கும் பூமாலை யணிந்த சடையையுடைய

பாதவீச்சுரரையும், சத்துருக்கேச்சுரரையுய், இலக்குமணே சுரரையும், இராமேசர் முதலிய மூர்த்திகளையும், தரிசித்துக் கொண்டு அன்றிரவு அங்கு தங்குக.

---

நான்காவது நான் தங்குமிடம்

## கபிலதாரை.

மூன்றாவது நாள் தங்கியிருந்த இராமேச்வரத்தை விட்டு எழுந்து ஸ்ரீராமபிரான் அன்போடு பூசை செய்து வணங்கத் தக்கதாக வீற்றிருந்தவரும், சிந்தித்தாலும் துதித்தாலும் அழகு நிறைந்த பலவாய சுகங்களையும் கொடுத்தருள்பவருமாகிய இராமநாதேச்வரரை வணங்கிப் பிரார்த்தித்துக்கொண்டும் வழிகளில் வீற்றிருக்கின்ற மஹத்தான சிவ லிங்க மூர்த்திகளையும், தேவசங்கேச்வார், வயிரவக்கடவுள் முதலிய மூர்த்திகளையுந் தரிசித்துக்கொண்டு கபிலதாரை வந்து ஸ்நானஞ்செய்து சிரார்த்தம் முதலிய கிரியைகளை ஒழுங்கே திருத்தமாய்ச் செய்து முடித்துக்கொண்டு, ரிஷபத்துவசரைத் தரிசித்து அன்றிரவு அவ்விடத்திலிருந்து விருப்புடன் அக்கடவுளை நாடிக்கொண்டு வலம்புரிவது நன்மையாகும்.

---

ஐந்தாவது நாள்

## காசிக்குத் திரும்புதல்.

நாலாவது நாள் தங்கியிருந்த கபிலதாரையிலிருந்து காசியம்பதிக்குத் திரும்பும்போது கபிலதீர்த்தத்தில் ஸ்நா

னஞ்செய்து கவாலா நாசிங்க மூர்த்தியைத் தரிசித்துக் கொண்டுவரும் வழியே வருணா சங்கமத்தில் ஸ்நானஞ்செய்து ஆதிகேசவனையும், சங்கமேச்வரரையும், கருவ விநாயகரை யும், பூஜை செய்து விளக்கமுற்ற கோதுமையால் அர்ச் சித்துத்தியானித்துக்கொண்டு வரும்வழியே பிரகலாதேசர், திரிலோசன வீசர், விந்துமாதவர், பஞ்சநதக்கவர்த்தீசுரர், மங்களகௌரி, வசிட்டேசுரர், வாமதேவர், பருவதேச்வரர், மகேச்வரர், சித்திவிநாயகர், சத்தாவரண கணபதி, முதலிய மூர்த்திகளைம் தரிசித்துக் கொண்டு மகத்தான மணிகர்ணிகை கட்டம் வந்து ஸ்நானஞ் செய்து ஸ்ரீ விச்வநாதர் ஸந்நி திக்குச் சென்று பணிவோடு தரிசித்துப் பிரார்த்தித்துக் கொண்டு முத்தி மணடபம் சேர்ந்து தண்டபாணி, திரு மால், துண்டிவிநாயகர், வயிரவர், சூரியதேவர், பஞ்ச விநா யகர், முதலிய மூர்த்திகளையும் தரிசித்துப் பூசித்துக்கொண்டு ஒரு பிரதக்ஷணஞ் செய்து தோத்திரம் புரிந்து தியானஞ் செய்க.

* தேவ தேவ விசுவேச செகமே ழினுக்குங் குருநாத
பாவ நாச மாகாசிப் பதிநாயகநின் கிருபையினல்
ஒவ அரிய பாதகங்கள் ஒழிப்பான் பஞ்சச் குரோசத்தை
யாவ பிரதக்கணஞ்செய்தேன் அருளவேண்டும் அடியேற்கே.

ஏ! கருணைக்கடல் வள்ளலாகிய ஜோதிலிங்க மூர்த் தியே! தேவர்களுக்கெல்லாம் அருள்புரிகின்ற விச்வநாதரே, ஸப்த லோகங்களுக்கும் ஆசாரியரே, பாவங்களை ஒழித்து அருள் புரிகின்றவரே, மகிமையுள்ள காசியம்பதிக்கு நாய

* காசி ரகசியம்.

கரே, தேவரீருடைய கருணையினால் நீங்குதற்கரிய பாவங்களை ஒழிக்கும் பொருட்டுக் காசியம்பதியில் பஞ்சக்குரோசப் பிரதக்ஷணஞ் செய்துவந்தேன்.

ஏ! கருணாநிதியாகிய கண்ணுதற் கடவுளே! உமது கருணையினால் அடியேன் இந்தப் பிறவியிற்செய்த தீவினைகள் யாவும் ஒழிந்து நற்பயனடையச் செய்வீராக; இக்காசியம்பதியில் நிரந்தரம் வசிக்கத் தக்க பாக்கியத்தை யருள்செய்வீராக; கொடிய பாதகங்கள் இனி உண்டாகாத வண்ணம் நல்ல புத்தியைத் தந்தருள்வீராக; விளங்கா நின்ற உமது திருவடிகளில் என்னை எனது தேகமுடிவில் சேர்த்தருள்வீராக; எனப் பணிவோடு வணங்கி ஸ்தோத்திரஞ் செய்து தத்தம் இருப்பிடம் சென்று உத்தம ஸாது, சந்யாசிகளுக்கு வணக்கத்தோடு உணவு கொள்ளத் தக்க போஜனஞ் செய்வித்து அவர்களிடம் ஆசீர்வாதம் பெற்றுக்கொண்ட பின்பு தம் பந்துக்களோடிருந்து போஜனஞ் செய்து முடித்து, தேன்துளிக்கின்ற தாமரைமலரையொத்த ஸ்ரீ விச்வநாதரின் திருவடிகளை மனதினிடத்தே நிலைக்கச்செய்வது விதியாகும். இந்த யாத்திரையின் பலன் சர்வ பாவ நிவர்த்தி.

---

## முக்கிய தீர்த்தங்கள்.

1. ஞானவாவி (கிணறு) : இந்த ஞானவாவிக் கிணற்றில் அருட்சோதிவள்ளலாகிய ஸ்ரீ விச்வேச்வரப் பெருமான் சதாவாசம் செய்வதான ஐதிஹ்யம். இந்தக் கிணற்றைத் தரிசித்து ஜலத்தைப் புரோட்சித்துக் கொள்ளல் சர்வ பாப நிவர்த்தி. இது ஸ்ரீ விச்வேச்வரர் சந்நிதிக்கு வடபக்கமிருக்கின்றது.

2. அமிர்தகுண்டம்:—இந்தக்குண்டத்தில் ஜலத்தைப் புரோட்சித்துக்கொள்வதினாலும், குண்டத்தில் ஸ்நானஞ் செய்வதினாலும் சரீரத்தின் தோலைப்பற்றிய குஷ்ட முத லிய சகல தொத்து வியாதிகளும் நீங்கி சுப க்ஷேமமடையும் பலன்.

3. நாக குண்டம்: இந்தக் குண்டத்தின் தீர்த்தத்தைப் புரோட்சித்துக் கொள்வதினால் எவ்வகைத்தான விஷ சம் பந்தமான வியாதிகளும் நீங்கிச் சுகமடையலாம்.

4. பைசாசு மோசன தடாகம்: இந்தக் தடாகத்தில் ஸ்நானஞ் செய்த மாத்திரத்திலே பைசாசு உபத்திரவ முள் ளவர்கள் அதினின்றும் விமோசனமடைவர்.

5. சக்கர புஷ்கரணி: என்ற மணிகர்ணிகா குண்டம். இது மணிகர்ணிகா கட்டத்திலிருக்கின்றது. இதில் ஸ்நா னஞ் செய்பவர் சாரூப பதவியின் பலனை அடைவர்.

---

## முக்கிய சந்நிதிகள்.

ஸ்ரீ விச்வேச்வரர் சந்நிதி: இந்த மஹத்தான லிங்க மூர்த்தியின் ஆலயம் கிழமேல் ஓடிய ஒரு சந்திலிருக்கின்றது. ஆலயத்தின் பிரதான வாசல் தெற்கு முகமுள்ளது. இந்த மகிமையுள்ள ஆலயம் தென்னாட்டிலுள்ள ஆலயங்களைப் போன்ற மாதிரி அவ்வளவு விசாலமானதாய்க் காணப்படா விட்டாலும் மிக சிற்ப அலங்காரமான அமைப் போடு கூடியதாகவும் சிறப்பும் அழகும் பொருந்தி

யதாகவும் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது. ஆலயத்தின் மூலஸ்தானம் பத்தடி சம சதுரமுள்ளது. மூலஸ்தானத்தைப் பொருந்தி உட்பிரகாரம் ஒன்றுள்ளது. அங்கு அநேக சிறிய மூர்த்திகளும் அநேக லிங்கங்களும் நிரம்பிப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றன. ஆலயத்தின் தளங்கள் யாவும் விலையேறப்பெற்ற வெண்ணிறமும் கருமை நிறமுமான சலவைக் கற்களாற் பரப்பப் பட்டிருக்கின்றன. அந்தக் கற்களின்மீது வெள்ளி நாணயங்கள் (ரூபாய்கள்) பதிக்கப் பட்டு அழகாய் ஜ்வலித்துப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் அற்புதக் காட்சியை ஆயிர நாவையுடைய ஆதிசேடனாலும் வர்ணிக்க முடியாதென்றே சொல்லலாம். கற்களினலமைத்த விமானமும், சொர்ண ஸ்தூபியும் திரிசூலமுமுடையதாக விருக்கின்றது. இம்மூல ஸ்தானத்தின் நடுவில் இரண்டரை அடி சமசதுரமுள்ள வெள்ளித் தகட்டாற் பொதிந்த தொட்டியினுள் வெள்ளி, தங்கத்தால் செய்வித்த ஆவுடையாரோடு கூடிய ஒரு முழ உயரமுள்ள கருணைக்கடல் வள்ளலாரும், சர்வ ரக்ஷகருமான ஸ்ரீ விச்வேச்வரப் பெருமான் (விச்வம்-எல்லாம், ஈச்வரன்-மேலானவன்) என்ற ஜோதிலிங்க மிருந்து ஜ்வலித்துப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது.

ஆ! என்ன அற்புதம். என்ன கண் காட்சி! பூலோக கைலாசம் என்பது இக்காசியம்பதிக்கே பொருத்தமுடையது.

---



ஸ்ரீ விஸ்வேஸ்வர் சந்நிதி மூலஸ்தானம், வெள்ளி தொட்டியின் நடுவில்
ஜோதிலிங்க மூர்த்தி வீற்றிருக்கும் காக்ஷி



ஸ்ரீ விஸ்வேஸர் சந்நிதி மூலஸ்தானம் வெள்ளி தொட்டியின் நடுவில் ஜோதி லிங்க மூர்த்தி புஷ்ப அலங்காரத்தோடு வீற்றிருக்கும் சேவை.

இந்த ஜோதிலிங்கம் மிகப் பரிசுத்தமுள்ள சாளிக்கிராம சிலையானபடியால் உயர்ந்த மாசற்ற நீலங்கலந்த கருமை நிறத்தோடிருந்து பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது. இம்மூல ஸ்தானத்துக்கு நாற்புறமும் வாசல்களுண்டு. இந்த மகத்தான சந்நிதியில் தரிசிக்கப் போவோர்களுக்குத் தென்னாட்டு ஆலயங்களில் நிறைந்துள்ள வைதீக நிர்ப்பந்தங்கள் போன்ற யாதொரு விதமான நிர்ப்பந்தங்களும் கட்டுப்பாடுகளும் கிடையா. இங்கு ஐதிஹ்ய சம்பிரதாயமாக நடத்தப் பட்டு வருகின்றது. பரம ஏழையாகிய ஒருவனும் நிறைந்த தனமுள்ள ஒருவனும் ஒரேவிதமாகப் பாவிக்கப் படுவர். சகல ஜனங்களும் தினே தினே மூலஸ்தானம் போய் ஸ்ரீ விச்வேச்வரப் பெருமான் என்ற அந்த ஜோதி லிங்கத்தைத் தத்தம் இருப்திக்கேற்ற பிரகாரம் தாமே தம் தம் கையால் அபிஷேகம் செய்து கொள்ளவும், பூசிக்கவும் உரிமை பெற்றிருக்கின்றனர். அச் சந்நிதியிலிருக்கும் உரிமைக்காரர்களுக்குப் பண்டா என்று பெயர்; சாதாரணமாய் அபிஷேகம் செய்து அருச்சித்துக் கொண்டும் தரிசித்துக் கொண்டும் போகிறவர்கள் தங்கள் தங்கள் சக்திக்கேற்றபடி கால் அணு முதல் அவர்கள் இஷ்டப்படி எவ்வளவேனும் காணிக்கையாகப் போட்டு வருவதுண்டு. இதிலும் யாதொரு விதமான நிர்ப்பந்தங்களும் தொந்தரவும் கிடையா. விசேஷமாக அபிஷேகம் அருச்சனை பூஜை முதலியன செய்ய விரும்புவோர்கள் அங்குள்ள பண்டாவிடம் முன்னரே தெரிவித்துக் கொள்ளுதலும், அந்தப் பண்டாவின் உதவியை விரும்புதலும் அவசியம். பண்டாவின் சகாயத்தை விரும்புகிறவர்கள் அந்தப் பண்டாவுக்கு ரூ. 2-க்குக்

குறையாமற் கொடுத்தல் வேண்டும். மேற்கொண்டு யாத்திரிகர்கள் பிரியப்பட்டு எதைக்கொடுத்தாலும் பெற்றுக்கொள்வர். இப்போதுள்ள ஸ்ரீ விச்வேச்வரப் பெருமான் ஆலயம் இந்தூர் (Indore) அகல்யாபாய் மகாராணி அவர்களால் கட்டி வைக்கப்பட்டது. ஆலயத்தின் தெற்கு வாசலில், அநேக புஷ்பக் கடைகள் நிறைந்திருக்கும் காட்சியும் காணலாம்.

அன்னபூரணி அம்பிகையின் சந்நிதி :—இந்த மஹத்தான சந்நிதி ஸ்ரீ விச்வேச்வரர் சந்நிதிக்குச் சமீபத்திலிருக்கின்றது. இந்த ஆலயம் 200 வருடங்களுக்கு முன்பு புனா தேசத்து (Poona) மன்னரால் கட்டுவிக்கப்பெற்றது. ஆலயத்தின் உட் செல்லும் பிரதான வாசல் வடக்கு முகமுள்ளது. அம்பிகையின் சந்நிதி மேற்கு முகமுள்ளது. மூலஸ்தானம் 15 அடி நீளம் 10 அடி அகலமுள்ளது. அம்பிகையின் சிலை ஒரு முழ உயரம். மூல ஸ்தானத்தைச் சுற்றி நாற்புறமும் பிரகாரமுண்டு. மணிமண்டபம் மிக அலங்காரமாக அமைக்கப் பெற்றது. மண்டபத்தின் தளங்கள் சலவைக் கற்களால் பரப்பப் பட்டிருக்கின்றன. இச் சந்நிதியில் அர்ச்சனை செய்ய விரும்புகிறவர்கள் ரூ. 0-12-0 முதல் ரூ. 1-4-0 வரை கொடுக்கவேண்டும். வேறு எந்த விதமான தொந்தரவுகளும் கிடையா.

துண்டிராஜகணபதி சந்நிதி :—இச்சந்நிதி ஸ்ரீ விச்வேச்வரர் சந்நிதிக்குப் போகும் வழியிலிருக்கின்றது. தெற்கே பார்த்த மூர்த்தி. மூர்த்தியின் உயரம் 4 அடி ; பக்தர்களுக்கு உடனே கிருபை யளிக்கக்கூடிய தோற்றத்தோடு



PHOTO காசி கேதார கட்டம். BY K. S. MUTHIAH

மிக அலங்காரமாய் அமையப்பெற்ற மூர்த்தியென்றே சொல்லலாம். இச்சந்நிதியிலும் பண்டாக்க ளிருக்கின்றனர். காணிக்கையாக எதைக் கொடுத்தாலும் திருப்தியோடு பெற்றுக்கொள்வர்.

சாட்சி விநாயகர் சந்நிதி ;—இச்சந்நிதியும் ஸ்ரீ விச்வேச்வரர் சந்நிதிக்குப் போகும் வழியின் ஓரமாக இருக்கின்றது. மூர்த்தி கிழக்கு முகமுள்ளது. முக்கியமாய்த் தரிசிக்கவேண்டிய மூர்த்தி.

விசாலாட்சி அம்பிகை சந்நிதி :— ஸ்ரீ விச்வேச்வராலயத்தினின்றும் கிழக்கே 100 - அடி சென்றால் அங்கு வடக்கிலிருந்து தெற்காக ஒரு பாதை போகின்றது. அந்தப் பாதையின் வழியே தெற்கே 1 பர்லாங்கு தூரம் போனால் கிழக்கே மீர்கட்டத்துக்குப் போகும் ஒரு பாதை தென்படும். அதன் வழியாக 200 அடி போனால் இந்த மஹத்தான சந்நிதியைக் காணலாம். இந்த ஆலயம் 1908-ம் வருடத்தில் தென்னாட்டு நாட்டுக்கோட்டை வணிகர் நகரத்தார்களால் 70,000 ரூபாய் வரை செலவுசெய்து புதிதாய்த் தென்னாட்டிலுள்ள கைதேர்ந்த சிற்பிகளைக் கொண்டே அழகாய்க்கட்டி முடிக்கப்பெற்றது. அம்பிகையின் ஆலயமும் மூர்த்தியும் வடக்குமுகமுள்ளன. அம்பிகையின் சிலை ஒரு முழ உயரம். அச்சந்நிதியில் சகல நடவடிக்கைகளும் நகரத்தாரால் தென்னாட்டு சம்பிரதாயப்படியே நடத்தப்பட்டு வருகின்றன.

கேதாரேச்வரர் சந்நிதி :—இந்த ஆலயம் கேதாரகட்டத்தில் கங்கைக்கரை யோரமாய் விஜயநகரம் அரண்

மனை கட்டடத்தின் பக்கத்திலிருக்கின்றது. இந்த ஆலயத்திலும் மூர்த்தி, லிங்க ரூபமாக அமையப்பெற்றது. சுயம்பு லிங்கம். இந்த ஆலயம் தென்னாட்டிலுள்ள திருப்பனந்தாள் ஆதீனத்தைச் சார்ந்த குமாரசாமி மடத்தாரின் மேல் விசாரணைக்குட் பட்டிருக்கின்றது. முக்கிய தரிசனம்.

சிந்தாமணி விநாயகர்:—கேதாரேச்வரர் ஆலயத்தினின்று தெற்கே கால் பர்லாங்கு சென்றதும் இரண்டு பாதைகள் தென்படும். அவைகளில் தெற்காகப்போவது அநுமந்த கட்டத்திற்குப் போகும் பாதை. மேற்கு நோக்கிச் செல்லும் பாதையில் இவ்விநாயகர் சந்நிதி இருக்கின்றது. சந்நிதியும் மூர்த்தியும் தெற்கு முகமுள்ளன. முக்கிய தரிசனம்.

அநுமார் சந்நிதி:—இந்த ஆலயம் அநுமந்த கட்டத்தில் கங்கைக் கரை யோரமா யிருக்கின்றது. மூர்த்தி மேற்கு முக முள்ளது. மூர்த்தியின் உயரம் 7 அடி. மிக்க கம்பீர தோற்ற முள்ள மூர்த்தி. முக்கிய தரிசனம். இங்கு அநேக வானரக் கூட்டங்களும் நிறைந்திருப்பதைப் பார்க்கலாம்.

காலபைரவர் சந்நிதி:—இந்த ஆலயம் விச்வேசர் கஞ்ச் போஸ்டு ஆபீஸின் கிழ்ப்புறமுள்ள சந்தின் வழியாகத் தெற்கே ஒரு பர்லாங்கு தூரம் சென்றதும் தென்படும். ஆலயமும் மூர்த்தியும் வடக்கு முகமுள்ளன. ஆலயத்துக்குத் தென்புறமும் வடபுறமுமாக இரண்டு வாசல்களுண்டு. மூலஸ்தானத்தை ஒட்டி ஒரு உட்பிரகார மிருக்கிறது. பிரகாரத்தின் நாற்புற முள்ள மண்டபங்களிற் காலபைரவர் பிரசாத கங்கண மென்ற காசிக் கயிறு விற்கும் பாவாஜி யென்ற சந்நியாசிகள் நிறைந்து இருப்பதையும் பார்க்கலாம். இந்த



PHOTO காசி துர்க்கா ஆலயம் (MONKEY TEMPLE.) BY K. S. MUTHIAH

சந்நியாசிகள் யாத்திரிகர்களின் மீது மயில் இறகால் அடித்தும், கையில் காசிக் கயிறுகளைக் கட்டிவிட்டும் காசு வாங்குவது முண்டு. இந்த ஆலயம் 100-வருடங்களுக்கு முன்பு புணுதேசத்து (Baji Rao of Poona) பாஜீராவ பேஷ்வா அவர்களால் கட்டிவைக்கப் பட்டதாய்த் தெரிகிறது.

துர்க்கையம்மன் சந்நிதி:—(Monkey Temple) ஜெங்கம்பாடி ரோடு வழியாகத் தெற்கே அரைமைல் தூரம் சென்றால் அங்கு விஜயநகரம் ராஜாவின் அரண்மனையைக் (Palace) காணலாம. அதிலிருந்து தெற்கே அரைமல் தூரம் சென்றதும் இந்த மகிமையுள்ள ஆலயமும், ஓர் அழகான தடாகமும் காணப்படும். அங்கு நூற்றுக்கணக்கான வானரங்கள் கூட்டங் கூட்டமாக நிற்பதும்,அவ் வானரங்கள் யாத்திரிகர்களிடம் கையை நீட்டி அவர்கள் கொடுக்கும் ஆகாராதிகளை விநயமாக வாங்கிக்கொண்டு ஓடுவதும் பார்ப்போர் மனதுக்கு விநோதமாகத் தோன்றும். காசியம்பதிக்கு யாத்திரையாக வருபவர்கள் இந்தத் துர்க்கை யம்மனைத் தரிசியாது போகார். முக்கிய தரிசனம்.

கவடியம்மன் சந்நிதி:—துர்க்கையம்மன் சந்நிதியிலிருந்து மேற்புறம் 1-பர்லாங்கு சென்றதும் இச்சந்நிதி தென்படும். கிழக்கு முகமுள்ள ஒரு சிறிய சந்நிதி. காசியம்பதிக்கு யாத்திரை வருபவர்கள் யாத்திரைகளை முடித்துக் கொண்டு பிரயாணப்படுமுன் இந்தச் சந்நிதிக்குக் (கவடி-சோழி, பலகறை) கவடி கொண்டுபோய் அம்மனைப் பிரதக்ஷணம் செய்யும் போது ஒவ்வொரு கவடியாகச் சந்நிதியிற் போட்டு "காசி பலன் எனக்கு; கவடி பலன் உனக்கு" என்ற வசனத்தைச்

சொல்லிக் கொண்டு பிரதக்ஷணம் வந்து தரிசித்துப் போகிறார்கள். இச்சந்நிதியைத் தரிசியாது போகிறதில்லை. முக்கிய தரிசனம்.

சங்கட விமோசனம்:—இது துர்க்கையம்மன் கோயிலிலிருந்து நேர் தெற்கில் அரைமைல் தூரத்தே இருக்கின்றது. இஃது ஒரு ரமணீயமான பூங்காவனம். இந்த வனத்தின் மத்தியில் ஸ்ரீ துளசிதாஸரால் ஸ்தாபனம் செய்யப்பட்ட மிகப் பிரசித்தமான ஆஞ்சநேயர் சந்நிதியும், அதன் எதிரில் ஸ்ரீராமபிரான் எழுந்தருளி யிருக்கிற காட்சியும் கண்காட்சிகளில் ஒன்றே. இந்தச் சந்நிதியின் பிரகாரத்துத் தென்கிழக்கு மூலையில் பத்தடி தூரத்தில் காசியம்பதியில் மிகப் பிரசித்தி பெற்ற இராமாயண கவிஞராகிய ஸ்ரீ துளசிதாசர் நிஷ்டை புரிந்து வந்துள்ள ஸ்தலம் ஒன்றுளது. ஸ்ரீ விச்வேச்வரரின் பூரண அருளைப் பெற்ற இந்த மகானின் வாசஸ்தலத்தைத் தரிசித்தல் அவசியம்.

ஸ்ரீ பாஸ்கரானந்த சுவாமி :—இந்த அவதார புருஷரின் சமாதி துர்க்கையம்மன் கோயிலிலிருந்து 150-அடிக்கு வடபுறம் ஓர் அழகான தோட்டத்தில் அமைக்கப் பெற்றுள்ளது. அங்கு விலையேறப்பெற்ற சலவைக் கற்களாற் சிறந்த சிற்பாலங்காரமான ஒரு கோயிலும் கட்டப்பட்டிருக்கிறது. அதில் சுவாமிகளால் ஸ்தாபிக்கப்பெற்ற லிங்கமூர்த்தி ஒன்று பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது. முக்கிய தரிசனம்.

---

## Places of Interest,

## முக்கிய இடங்கள்.

அவுரங்கசீப் மசூதி (Minaret of Aurangzeb's mosque)

இந்த அழகும், உன்னதமுமான மசூதி அவுரங்கசீப் என்ற மகம்மதிய அரசரின் காலத்தில் கட்டப்பட்டதினால் அவுரங்கசீப் மசூதி யென்ற பெயரோடு அழைக்கப்பட்டு வருகின்றது. இது மிகவும் அழகும், உன்னதமுமான கோரி; இதனுயரம் தரைமட்டத்திலிருந்து சுமார் 150 அடி; இதன் உச்சிக்குப்போக அழகான படிக்கட்டுகளுண்டு. இந்த மசூதி கட்டப்பட்டிருக்கிற இடத்தில் ஆலயமிருந்தது. அது மேற்படி அரசரால் அப்புறப்படுத்தப்பட்டு அதே இடத்தில் இந்த மசூதி அமைக்கப்பெற்றதாய்த் தெரிகிறது. இந்த மசூதியின் வட பக்கம் 50 அடி தூரத்தில் பிந்து மாதவர் (விஷ்ணு சந்நிதி) ஆலய மிருக்கின்றது. மசூதியின் உச்சியில் நின்று இந்த அழகான உன்னத பட்டணத்தின் முழுக் காட்சிகளையும் பார்த்து ஆனந்திக்கலாம்.

மான் மந்திர நக்ஷத்திர சாலை:—(Man Mandir Observatory) இந்த புராதனமான அழகிய நக்ஷத்திரசாலை தசாச்வமேத கட்டத்தின் வடக்கே 200-அடி தூரத்திலுள்ள மான்மந்திர கட்டத்தில் ஓர் மாடி வீட்டின்மீது அமைக்கப் பெற்றிருக்கிறது. இது கி. பி. 1600-ம் வருடத்தில் ராஜபுதன நாட்டைச் சார்ந்த அம்பரி (Amber) நகரத்தின் மன்னர், ராஜா மான் சிங் (Rajah Man Singh) அவர்களால் நிருமிக்கப்பட்டது. இந்த அரசரின் சந்ததியாகிய ராஜா ஜயசிங் (Rajah Jai Singh) அவர்களிடம் மகம்மது

ஷா (Mohamed Shah) என்ற மகம்மதிய அரசர் பஞ்சாங்கங்களைத் திருத்துதல் செய்து கொடுக்கும்படி வேண்டிக் கொண்டதாயும் அந்த வேண்டுகோளுக் கிணங்கியே இந்த அற்புதமான நக்ஷத்திரசாலையை நிருமித்ததாகவும் தெரிய வருகிறது. ராஜா ஜய சிங் (Rajah Jai Singh) அவர்கள் ஜோதிடத்தில் மிகவும் நிபுணர். இந்த நக்ஷத்திர சாலையில் அதி அற்புதமான யந்திரங்கள் அமைக்கப்பட் டிருக்கின்றன. 1. தக்ஷிணவித்யா இயந்திரம் (Dakshina Bhitta Yantra). 2. சமராத இயந்திரம் (Samrat Yantra). சக்கர இயந்திரம் (Equinoctical Circle). 4. தினசரி. இயந்திரம் (Diganse Yantra) போன்ற பல அற்புதமான இயந்திரங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இந்த இயந்திரங்களின் உதவியால் நிழலையறியவும், நக்ஷத்திரங்களைக் கண்டு பிடிக்கவும், கிரகங்களின் உத்தராயனம் தக்ஷிணாயனம் முதலியவைகளை எளிதிலறிந்து கொள்ளவும் கூடுமாம்.

இதே மாதிரியுள்ள நக்ஷத்திரசாலை டில்லி (Delhi) மதுரா (Muttra), உஜ்ஜனி (Ujjain), ஜெயப்பூர் (Jaipur) முதலிய இடங்களிலும் நிருமிக்கப் பட்டிருந்தன. அவைகளில் தற்காலம் ஜெயப்பூரிலிருக்கின்ற யந்திரசாலை மட்டிலும் நல்ல ஸ்திதியில் உபயோகத்திலிருப்பதாய்த் தெரிய வருகின்றது. பூர்வத்தி லிருந்த நமது வான சாஸ்திர நிபுணர்களின் வல்லமையை எடுத்துக் காட்டும்படியாக இந்த யந்திரசாலை பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது. ஒவ்வொருவரும் தவறாது பார்க்கவேண்டிய பெருமையோடு கூடியுள்ளது.



PHOTO காசி—மான்மந்திர கட்டம். BY K. S. MUTHIAH

**சாரநாத் (Saranath)** :—இது கௌதமபுத்தரின் அதிகால வாசஸ்தலம். நம் புண்ணிய பூமிக்கு (காசி) வடகிழக்கில் ஆறு மைல் தூரத்திலிருந்து பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது. புத்தர் காலத்தில் மிக அழகான நிலைமையிலிருந்து அழிவுற்றதாய் அங்கு காணப்படும் பல சின்னங்களால் ஊகிக்கலாம்.

மகா புத்தர் தமது மகோன்னத உபதேசங்களை முதல் முதல் செய்வதற்கிடமாக விளங்கிய மான் (Deer Park) தோட்டமும் இதுவே. அழிவுற்றுப் பாழாய்ப் போன இந்த அற்புதமான விடத்தில் நம் காருண்ணிய ஆங்கில கவர்ன்மெண்டாரால் பிரசித்திபெற்ற இந்திய சிற்பிகளைக் கொண்டு கற்களால் மிக அழகாகக் கட்டுவிக்கப்பெற்ற ஒரு விநோத காட்சி சாலை (Museum) பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது. பூர்வீக புத்தமத ஆலயங்களின் கல் விக்கிரகங்கள், பல புதையுண்டு கிடந்தவை எடுக்கப்பட்டு இந்த காட்சி சாலையில் சேகரித்து வைக்கப்பட்டுள்ளன. அவைகளில் ஓர் அசோகா கம்பம் (Asoka Pillar) மிக விசித்திரமாகவுள்ளது. அது கண் காட்சி சாலையை மிகவும் சோபிக்கச் செய்யும்படியான பிரகாசத்தோடு அமையப் பெற்றிருக்கின்றது. அந்தக் கம்பத்தின் சிரசில் ஒரே கல்லில் நாற்புறமும் நான்கு சிங்கத்தின் முகங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன.

அதின் அற்புத வேலைப்பாடுகளும் மேன்மையும் இன்றும் அழியாதிருக்கின்றன என்ன அற்புதம்! எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன்னதாகச் செய்வித்த

அந்தச் சிங்கமும் அநேக நூற்றாண்டுகளாகப் புதையுண்டு கிடந்தும், அதன் பள பளப்பும் வேலைகளும் அழிவுறவில்லை. நம்மவரின் பூர்வீக சிற்ப கைத் தொழிலின் சிறப்பை அந்த அசோகா கம்பம் பிரகாசிக்கச் செய்கின்றது. தற்காலத்தில் நம் பூர்வீக இந்திய சிற்பிகளின் வேலைத் திறமையும், வல்லபமும் முன் வராது மறைந்து உருத் தெரியாமல் மங்கிக்கிடப்பதற்கு நாம் விசனப் படாதிருக்க முடியாது. இந்தக் காட்சி சாலையிலிருந்து கிழக்கே 4 பர்லாங்கு தூரத்தில் சாரநாத் மஹாதேவ் ஆலயம் ஒன்றுளது. முக்கிய தரிசனம்.

"Central Hindu College" (Now affiliated to the "Benares Hindu University") "ஸென்ட்ரல் இந்து காலேஜ்" இப்பொழுது "காசி இந்து சர்வ கலா சாலை"யோடு சேர்க்கப்பட்டுள்ளது.

இக் கலாசாலை பொதுஜன ஊக்கத்தாலும் பிரக்யாதி பெற்ற மிஸஸ் பெஸன்டு அம்மை, பண்டித மதன் மோகன மாளவியா இவர்களின் நன் முயற்சியாலும் பல இந்திய மன்னர்களுடையவும் பிரமுகர்களுடையவும் பொருளுதவியைக் கொண்டு செவ்வனே நடத்தப்பட்டுவந்து தற்பொழுது சுமார் 4-வருஷ காலமாக பிரக்யாதிபெற்ற "காசி இந்து சர்வ கலாசங்கத்"தோடு சேர்க்கப்பட்டுள்ளது. இந்த "இந்து சர்வ கலா சங்கத்தில்" நானாவித சாஸ்திரங்களும் கற்பிக்கக் கூடிய கலாசாலைகள் தனித்தனியே ஏற்படுத்தப் பட்டுள்ளன. காசிக்குத் தென்பாகத்திலுள்ள "நகவா" (Nagwa) என்னு மிடத்தில் சுமார் 5 மைல் சுற்றளவுள்ள



PHOTO சாரநாத்-மியூசியம் (காகுஷி சாலை) 6 miles from Benares. BY K. S. MUTHIAH.

கிலத்தில் " இந்து சர்வ கலாசங்கக் கட்டிடம் இருக்கிறது. இதுவும் முக்கியமாய் பார்க்கவேண்டிய இடங்களில் ஒன்றே. இதைப்போல் அற்புதமானதும் விசாலமானதும் ஆன சர்வ கலாசங்கக் கட்டிடம் இந்தியாவில் வேறு எவ்விடத்திலும் இல்லையென்றே சொல்லலாம். சர்வ கலாசங்கக் கட்டிடத்தைச் சுற்றியே மாணுக்கர்களுக்கும் போதகர்களுக்கும் வசதியான இடங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இந்த இடத்தை ஒரு புதிய பட்டணமென்றே சொல்லலாம்.

இராஜியார் கலாசாலை (Queen's College) :—காசிமாநகரில் காட்சிக்குக் கம்பீரமாகத் தோன்றும் கட்டிடங்களில் இதை முதன்மையாகக் குறிப்பிடலாம். இந்த அழகான கட்டிடம் மேல் நாட்டுச் சிற்ப சாதுரியத்தை அநுசரித்து அமைக்கப்பெற்றுள்ளது. இக்கலா சாலைக்கு துவக்கத்தில் சமஸ்கிருத பாடசாலை (Sanskrit College) என நாமமிருந்ததாகத் தெரியவருகிறது. கட்டிடம் சூனர் கல்லினால் (Chunnar stone) அமைக்கப்பெற்று நாற்புறமும் நாகர எழுத்துக்களில் சம்ஸ்கிருத பிரமாணங்கள் செவ்வனே செதுக்கப்பட்டுச் சிறந்து விளங்குகிறது. இக்கட்டிடத்தின் வேலைகளை நடத்தினவர் மேல்நாட்டு சிற்ப சாஸ்திரியாகிய மேஜர் கிட்டோ (Major Kittoe). 1847-ஆம் வருடம் கடைக்கால் போட்டு 1852-ஆம் வருஷம் முடிவு பெற்றது. கலாசாலை கட்டிமுடிந்த மொத்தச் செலவு 13,000 பவுன். இந்தக் கலாசாலை ஆரம்பம் 1791ஹு அக்டோபர்மீ 28உ.

நகரமண்டபம் :—(Town Hall) : இந்த நகர மண்டபம் முனிசிபல் தோட்டத்துக்கு எதிரில் கொத்தவாஸ்

போலீஸ் ஆபீசுக்கு மேற்புற மிருக்கின்றது. இந்த அழகான கட்டிடம் லேட் டியூக் ஆவ் எடின்பர்க் (Late Duke of Edinburgh) அவர்கள் 1870-ல் காசியம்பதியில் வந்த ஞாபகார்த்தமாக விஜயநகரம் மஹாராஜாவால் கட்டுவிக்கப் பட்டது. 1876-ம் வருடம் நமது மாட்சிமை தங்கிய லேட் எட்வர்ட் சக்ரவர்த்தி பிரின்ஸ் ஆப் வேல்ஸ் (Prince of Wales) இளவரசராக வந்த சமயம் அவரின் ஞாபகார்த்தமாக ஆல்பர்ட் ஹால் Albert Hall என்ற நாமம் சூட்டப் பெற்றது.

நேப்பால் மந்திரம் (Nepalese Shivala) இந்த அற்புதமான நெப்பாலி கோயில் கங்கைக்கரை ஓரமாய் மான் மந்திர கட்டிடத்துக்கு வடபுற மிருக்கின்றது. இது மிகவும் அற்புதமான சிற்ப வேலைகளால் நிறைந்து இந்திய கைத்தொழிலின் மகிமையை எடுத்துக் காண்பிக்குமாறு பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது. மரத்தினுல் செய்யப்பட்ட இந்தக் கோயிலின் ஸ்தூபி முதலியவைகளில் அனேக அபூர்வ சித்திர வேலைப்பாடுகள் செதுக்கப்பட்டு விளங்குகின்றன. காசியில் தரிசிக்க வேண்டிய முக்கிய இடங்களில் இந்த ஆலயமும் ஒன்றெனச் சொல்லலாம்.

---

## ரெயில் பாதையின் வசதிகள்.

காசிக்கு சென்னப்பட்டணமிருந்து (Madras) கீழ்ச் சமுத்திரக்கரை ஓரமாய் பெஜவாடா, ராஜமஹேந்திரம், வால்டேர், விஜயநகரம், குந்தாரோட், கடகம், காக்பூர், ஆத்ரா, கோமோ, கயா மொகல்சராய் வந்து காசிக்குப்போவது

ான்று. மேற்சொன்ன ஏழாவதாகிய காக்பூர் ஜங்ஷனில் இறங்காமல் நேரே கல்கத்தா (Calcutta) போய் அங்கிருந்து நேரே மொகல்சரை (Mogalsarai) வழியாக காசிக்குச் செல்வது மற்றொன்று. இந்த இரண்டு பாதைகள் தான் யாத்திரிகர்களுக்கு மிகவும் வசதியானவை. இதில் முதலில் சொன்ன காக்பூர், கோமோ, வழியாய்ப் போவதைப் பார்க்கிலும் இரண்டாவது சொன்ன கல்கத்தா போய்ப் போவது நிரம்பவும் சிலாக்கியம். இந்த இரண்டு வழிகளுக்கும் வித்தியாசம் அதிகம் ஒன்றுமில்லை. நூறு மைல் வித்தியாசமிருக்கலாம். பட்டணமிருந்து புறப்படுகிற யாத்திரிகர் சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனில் இரவு 7 மணி வண்டியேறி வழிகளில் தாமசிக்காமல் மறு நாளுக்கு அடுத்த நாள் காலை 10-5க்கு அதாவது தாம் ஏறின வண்டியை விட்டு வண்டி மாறாமலே 39-மணி நேரத்தில் கல்கத்தா (Calcutta-Howrah) ஸ்டேஷன் சேர்ந்து விடலாம். அங்கிருந்து அன்று தினமோ அல்லது மறு நாளோ பகல் 12-6, 3-56, சாயந்திரம் 6-36,, இரவு 8-6, மணிகளுக்கு புறப்படும் வண்டிகளில் ஏறினல் மறுநாட் காலை முறையே 7-21, 9-50, 6-40, 9-5, மணிக்கு மொகல்சராய் ஜங்ஷன் சேர்ந்துவிடலாம். மொகல் சரையிலிருந்து காசி ஸ்டேஷன் 7-மைல். சென்னைப்பட்டண மிருந்து பிரயாணமான யாத்திரிகர் நாலாவது நாள் காசிபோய்ச் சேரலாம். யாத்திரிகர் ரயிலில் உட்கார்ந்து பிரயாணஞ் செய்ய வேண்டிய மொத்த நேரம் 52 முதல் 58 மணி தான். சென்னைப்பட்டண மிருந்து கல்கத்தா 1,032 மைல், மூன்றாவது வகுப்புக்கு ரூ. 19-11-6. கல்கத்தாவிலிருந்து காசி 429 மைல். மூன்றாவது வகுப்பு

வண்டிக்கு ரூ. 5-14-6. சென்னைப் பட்டணமிருந்து பம்பாய் வழியாக காசிக்குச் செல்லும் வழிப்பிரயாண வசதிகளைக் கடைசிப்பக்கத்தில் பார்க்கவும்.

---

## சென்னைப்பட்டணமிருந்து கல்கத்தா வழியாய்ச் செல்லும் மார்க்கத்திலுள்ள முக்கிய மஜிலிகள் (தங்குமிடங்கள்).

---

பெஜவாடா (Bezwada) இது சென்னையிலிருந்து 268 மைல். மூன்றாவது வகுப்பு வண்டிக்கு ரூ. 5-2-0. இது ஒரு ஜங்ஷன் ஸ்டேஷன். ஹைதராபாத், குண்டக்கல், மசூலிபட்டணம் முதலிய இடங்களிலிருந்து வரும் இருப்புப் பாதைகள் இவ்விடம் வந்து சந்திக்கின்றன. இங்கு புண்ணிய நதியாகிய கிருஷ்ணா நதியின் ஸ்நான விசேடம். ஸ்டேஷனிலிருந்து நகரும், ஸ்நான கட்டமும் 1½-மைல். ஸ்டேஷனுக்கு ½ பர்லாங்கு தூரத்தில் மிக வசதியான தர்ம சத்திரம் ஒன்றுளது. அங்கு யாத்திரிகர்களுக்குச் சமையல் சாப்பாடு செய்துகொள்வதற்கு மிகவும் வசதிகள் அமையப் பெற்றிருக்கின்றன. கிருஷ்ணா நதியின் அணைக்கட்டும் அவசியம் பார்க்கக் கூடிய காட்சிகளில் ஒன்று. அங்கு அந்தணர்களுக்கு அன்போடு அன்னமளிக்கும் தர்ம சத்திரங்களுமிருக்கின்றன.

கோதாவரி (Godavari): இது பெஜவாடாவிலிருந்து 91 மைல். மூன்றாவது வகுப்பு வண்டிக்கு ரூ. 1-14-0. இவ்விடத்தில் கோதாவரி என்ற புண்ணிய நதியின் ஸ்நானம் விசேடம். ஸ்டேஷனிலிருந்து தவளேச்வரம் அல்லது கோடி லிங்கமென்ற ஸ்நான கட்டம் நாலு பர்லாங்கு தூரமுள்ளது. ஸ்நான கட்டத்தில் யாத்திரிகர்கள் சமையல் சாப்பாடு முதலியன நடத்திக்கொள்ள மிகு வசதியான சத்திரமிருக்கின்றது. பிரபல தர்மிஷ்டரான நாளம்வாரி என்ற ஒரு தெலுங்கு தேசத்துப் பிரபுவால் ஒரு தர்ம சத்திரம் நடந்து வருகின்றது. அங்கு பிராமணர்களுக்கும், மற்ற சகல ஜாதியார்களுக்கும் இலவசமாய் அன்னமிட்டு வருகிறார்கள். தெலுங்கு தேசத்திலுள்ள சத்திரங்களில் போஜனஞ் செய்யப்போகிறவர்கள் அத்தேச ஆசாரப்படி மடி கட்டிக்கொண்டும் தீர்த்த பாத்திரம் வைத்துக்கொண்டும் போகவேண்டும்.

கோதாவரி நதியின் வாராவதி (பாலம்) இந்தியாவிலுள்ள வாராவதிகளில் இரண்டாவதாகக் கருதப்படுகிறது. இந்த அழகான வாராவதி 56 கணவாய்களை யுடையது. ஒவ்வொரு கணவாயும் 160 அடி நீள முள்ளது. மொத்தம் $1\frac{3}{4}$-மைல் நீளமென்று கணக்கிடப் பட்டிருக்கிறது.

வால்டேர் (Waltair) :—கோதாவரியிலிருந்து 126 மைல். மூன்றாவது வகுப்பு வண்டிக்கு ரூ. 2-2-0. இவ்விட

---

ரயில்வே கட்டணங்கள் பலகாரணங்களால் உயர்த்தப்படுவதால் நாம் சொல்லியிருக்கிற கட்டணங்களில் சில மாறுதல்களிருக்கலாம்.

யிருந்து 4-மைல் தூரத்தில் சிம்மாசல மென்ற மலையின்மீது விஷ்ணு சந்நிதி யிருக்கின்றது. நரசிம்ம அவதாரம். முக்கிய தரிசன விசேஷம். சந்நிதிக்குப் போகிற வழியும், அங்கு தாமசிக்க ஜாகையும் மிக வசதியே. சிம்மாசலத்துக்கு சிம்மாசலம் என்ற ரெயில்வே ஸ்டேஷனிலிறங்கியும் போகலாம். (வால்டேர் ஸ்டேஷனிலிருந்து சிம்மாசலம் ஸ்டேஷன் ஐந்து மைல்.) ஆனுல் வால்டேரிலிருந்து நேரே சந்நிதிக்குப் போவதுதான் சௌகரியம். இந்த வால்டேர் ஸ்டேஷனில் சோழ தேசத்துப் பிராமணரின் ஒட்டலிருக்கிறது. இவ்விடமிருந்து விசாகப்பட்டணம் இரண்டு மைல். ஸ்டேஷனில் மாட்டு வண்டிகள் கிடைக்கும். விசாகப்பட்டணம் தந்த வேலைக்குப் பேர்போன விடம்.

விஜயநகரம் (Vizianagaram):—வால்டேர் ஸ்டேஷனிலிருந்து 38 மைல். மூன்ருவது வகுப்பு வண்டிக்கு ரூ. 0-13-0. இது புராதீன சரித்திர சம்பந்தமான தேசம். பாஷை தெலுங்கு. அரசர் இருக்குமிடம் அரண்மனை முதலிய கட்டிட விசேஷம். ஸ்டேஷனுக்குச் சமீபத்தில் சமையல் சாப்பாடு செய்துகொள்ள வசதியான சத்திர மிருக்கிறது. நகரினுள் அந்தணர்களுக்கு இலவசமாய் அன்னமளிக்கும் தர்ம சத்திரங்களு மிருக்கின்றன. இவ்விடத்தில் ஜலவசதி மிகவும் குறை.

பர்காம்பூர் (Berhampore):—விஜயநகரம் ஸ்டேஷனிலிருந்து 135 மைல். மூன்ருவது வகுப்பு வண்டிக்கு ரூபா 2-10-0. பாஷை-தெலுங்கு. ஸ்டேஷனிலிருந்து அரை பர்லாங்கு தூரத்தில் ஒரு தர்மசாலை யிருக்கிறது.

சமையல் சாப்பாடு செய்துகொள்ள மிக வசதியே. இங்கு சகல வகுப்பாருக்கும் இனுமாய்ச் சாப்பாடு கிடைக்கும். இதிலிருந்து பேட்டை என்ற ஊர் இரண்டு மைல்; இது பட்டுத்துணிகளுக்குப் பேர் போன விடம்.

குர்தா ரோட் (Khurda Road Junction:) :—பர்காம் பூரிலிருந்து 91 மைல். மூன்ருவது வகுப்பு வண்டிக்கு 1-10-0. பாஷை ஒட்டாம். பூரி என்ற ஜெகநாதத்துக்குப் போக இவ்விடம் வண்டி மாறவேண்டும். இந்த ஸ்டேஷனில் தாமதிப்பவர்கள் நிரம்பவும் எச்சரிக்கையாக விருத்தலவசியம்.

சாக்ஷிகோபால் (Sakshigopal):—குர்தா ரோட் ஸ்டேஷனிலிருந்து 17 மைல். மூன்ருவது வகுப்பு வண்டிக்கு ரூபா 0-5-0. இங்கு சாக்ஷிகோபால் என்ற விஷ்ணு சந்நிதி முக்கிய தரிசன விசேடம்.

பூரி-ஜகந்நாதம் (Puri) :—சாக்ஷிகோபால் ஸ்டேஷனிலிருந்து 13 மைல். மூன்ருவது வகுப்பு வண்டிக்கு ரூ. 0-3-0. (ஜகந்நாதம் என்ற புண்ணிய க்ஷேத்திரத்திற்குப் பூரி யென்ற பெயருமுண்டு); ரெயில்வே ஸ்டேஷன் பெயர் "பூரி." ஸ்டேஷனிலிருந்து நகர் இரண்டு மைல். இது ஒட்டாபாஷை பேசும் மத்திய தேசம். இங்கு உலகப் பிரசித்தி பெற்ற விஷ்ணு ஆலயம் ஒன்று ஜ்வலித்துப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது. இந்த மஹத்தான ஆலயம் விசாலமும், பெரிதும், உன்னதமுமானது. இந்த ஆலயம் 652 அடி நீளமும், 630அடி அகலமும் நாற்புறமும் 20 அடி உயரமுமுள்ள கல்லினுற் கட்டுவித்த மதில்களு முடையது.

இந்த மஹத்தான ஆலயத்தினுள் நூற்றுக்கணக்கான சிறிய சந்நிதிகளுமுண்டு. இதில் முக்கியமான சந்நிதிகள் ஜக்கர் நாத் (ஜக்கர்நாத்-ஜகந்நாத்) பீமலாதேவி, லட்சுமிதேவி என மூன்று சந்நிதிகள். இந்தப் புராதனமான ஆலயம் A. D. 1174-ல் ராஜா அனங்க பீமதேவ் (King Anong Bhim Dev) என்பவரால் துவக்கப்பட்டு 1198-ம் வருடத்திற் கட்டி முடிக்கப்பெற்றதாய்த் தெரிய வருகிறது. இந்த ஆலயம் கட்டி முடித்த மொத்தச் செலவு ரூ. 7,50,000. இந்த ஆலயத்தின் மூர்த்திகள் மிகவும் புராதின முள்ளன. அதாவது A. D. 318-ம் வருட முதலிருப்பதாய்த் தெரிய வருகிறது. இந்த மகிமை பெற்ற ஆலயத்துக்கு, தரிசனத்துக்காக வருடந்தோறும் லக்ஷக்கணக்கான யாத்திரிகர்கள் வந்து போகிறார்கள். இங்கு ஜூன், ஜூலை மாதங்களில் நடக்கிற ரத உற்சவத்தின் பொழுது (Car Festival) குறைந்தது லக்ஷம் யாத்திரிகர்கள் கூடுவதைக் காணலாம். இந்த ஜகந்நாத சுவாமி கோயிலிலிருந்து ஒரு மைல் தூரத்தில் இந்திரதூம்னு (Tuderdumna) என்ற இடமிருக்கிறது. ரத உற்சவ சமயம் எட்டு நாள் சுவாமி அவ்விடம் வாசஞ் செய்வதாக ஆகமம். இந்த ஆலயத்திலுள்ள சந்நிதிகளில் முக்கியமான சந்நிதி ஸ்ரீமந்திரர் என்ற ஜகந்நாத சுவாமி சந்நிதிதான்; இச்சந்நிதிக்குச் செல்ல மூன்று வாசல்களுண்டு. பிரதான வாசலுக்கு (Lion Gate) சிம்மத்துவார் என்ற நாமம் சொல்லப்படுகிறது. வாசலி னிரண்டு பக்கங்களிலும் காவல் காத்துக் கொண்டிருக்கிற விதமாய் அழகாய் கற்களில் சிற்ப சாதுரிய அமைப்போடு செதுக்கப்பட்ட சிங்கங்களிரண்டு காணப்படும்.

இந்த வாசல் வழியாக 21 படிக்கட்டுகள் கடந்து சென்றால் அங்கு ஓரழகிய சபாமண்டபம் தென்படும். இம்மண்டபத்தைக் கடந்து உட்சென்றால் விஸ்தாரமான திறந்த முற்றவெளியும் அதன் மத்தியில், ஜகந்நாத சுவாமி யின் சந்நிதி ஜ்வலித்துப் பிரகாசித்துக் கொண்டிருப்பதை யும் காணலாம். இச்சந்நிதியில் அழகிய ரத்ன சிம்மாசனத் தில் ஜக்கர்நாத சுவாமியும், ஜ்யேஷ்டரான பலராமரும், சுபத்திரா தேவியும் வீற்றிருக்கிற காட்சி அற்புத கண் காட்சியே. ஜக்கர்நாத், பலராம் இவர்களுக்கு முண்டமான கைகளும், சுபத்திரா தேவிக்குக் கைகளே யில்லாமலும் காணப்படும். அதாவது ஜக்கர்நாத் சுவாமியே ஒரு கிழ வேடம்பூண்ட சிற்பியாகவந்து இந்த மூர்த்திகளைச் செய்து கொண்டிருந்த தாகவும் மூர்த்திகளின் வேலைமுடிவுபெறு முன் அதிபக்த சிரோமணியாகிய ராஜனுடைய பாரியை யின் விருப்பத்திற்காகக் கர்ப்பக் கிரகத்தின் வாசல் அவ சரமாய்த் திறக்கப்பட்ட காரணத்தினால் மூர்த்திகளின் உருவம் பூர்த்தியடையாது அரைகுறையாக நின்றுவிட்ட தாகவும் அங்குள்ள பண்டாக்கள் சொல்லும் கதையால் தெரிகிறது. இச்சந்நிதியில் யாத்திரிகர்கள் தரிசனத்துக்கு நினைத்த நேரமெல்லாம் போக அநுமதி கிடையாது. குறிப் பிட்ட காலத்தில் போய் தரிசித்துக் கொள்ளவேண்டும். இந்த மூர்த்திகள் விலையேறப் பெற்ற ஆடை ஆபரணங் களால் ஒவ்வொரு காலங்களிலும் புதிது புதிதாய் அலங் கரிக்கப் படுகின்றன. ஸ்ரீஜக்கர்நாத சுவாமியின் நெற்றியில் அதிக விலையேறப்பெற்ற வைரக்கல் ஒன்று பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது. ஒவ்வொருதின்மும் அனேக தடவை

களில் மூர்த்திகளுக்கு போகம் (Bhog) நிவேதனம் போர்க்குவியலாக குவிக்கப்படுகின்ற காட்சி வேறெத் தேசங்களினும் பார்க்க முடியாதென்றே சொல்லலாம். இந்தப் பிரசாதத்தில் பெரும்பாகம் சந்நிதியில் வைத்தே முன்பணங் கொடுத்தவர்களுக்குச் செலவிடப் படுகின்றது. மீதி பிரசாதம் கோயிலின் பிரகாரத்தில் ஆனந்த பஜார் (Ananda Bazaar) என்ற இடத்துக்கு அனுப்பி பொது ஜனங்களுக்கு விற்கப்பட்டு வருகின்றது. பிரசாதம் விற்கும் இடத்தில் ஜனங்கள் அதை வாங்கவேண்டி நான் முந்தி நீ முந்தி யென்று அவஸ்தைப்படும் நெருக்கடியினால் இந்தப் பிரசாதத்தின் மகிமை நன்கு விளங்கக்கூடியதே. சுவாமி சந்நிதியிற் குவிக்கப்படும் நிவேதனம் ஏறக்குறைய லக்ஷம் ஜனங்கள் புசிக்கக்கூடியதாக இருக்கும். இதைப் பாகம்செய்ய 200 பரிசாரகர்க ளிருக்கிறார்கள். இச்சந்நிதிக்கு வரும் பிராமணரும், மற்றைய ஜாதியாரும் யாதொரு வித்தியாச மன்றி ஒரே சமமாக இருந்து பிரசாதத்தை (அன்னமுதலியவைகளை) புசிக்கிறார்கள். இந்த அற்புத மான பிரசாதத்தின் மகிமையும், பரிசுத்தமும், மனதா லு[illegible] அளவிட்டு மதிக்கக் கூடியதல்ல. "சர்வம்—ஜகந்நாதம்" என்பது இது தான். இங்கு நடைபெறும் "ரத ஜாத்ரா" என்னும் பிரம்மோற்சவத்துக்கு 14 நாளைக்கு முன் ஜகந்நாத சுவாமிக்கு சமுத்திர தீர்த்த யாத்திரை உற்சவம் நடைபெறுகின்றது. அதாவது சமுத்திரத்தில் சுவாமி ஸ்நானம் செய்துவிட்டு அன்றுமுதல் இரண்டு வாரம் ஏகாந்தமாய் இருப்பதான ஐதிஹ்யம். இந்த நாட்களில் சந்நிதியின் கதவுகள் திறக்கப்பட மாட்டா

இந்த நாட்களில் தரிசனத்துக்கு வருபவர்களுக்கு உள்ளேபோக அனுமதி கிடைக்காது. இதன் மத்தியில் ரத உற்சவத்துக்காக 16 சக்கரங்களோடு கூடிய ஓர் உன்னத ரதம் ஒன்று ஜகந்நாத சுவாமிக்கும் வேறிரண்டு சிறிய ரதங்கள் பலராமர், சுபத்திரா தேவிக்கும் அலங்கரிக்கப் படுகின்றன. மங்களகரமான குறித்த நாளில் அம்மூன்று ரதங்களையும் மேள தாள வாத்தியங்களோடு ஒரு மைல் தூரத்திலுள்ள ஜனக்பூர் (Janakpur) என்ற தோட்டத்திற்கு இழுத்துக்கொண்டு போகிறார்கள். அங்கு பத்து நாட்கள் தங்கி பின்பு அந்த ரதங்களை யதாஸ்தானத்துக்கு இழுத்துக் கொண்டு வருகிறார்கள். இந்த மஹத்தான ஆலயத்துக்குப் போய்த் தரிசிக்க வேண்டிய தவசியம் என்பதை நாம் சொல்லாமலே தெரிந்துகொள்ளலாம். இவ்வூரில் அநேக தர்ம சத்திரங்கள் இருக்கின்றன. யாத்திரிகர்களில் அநேகர் பண்டாக்கள் வீடுகளிலும், கோயிலின் பிரகாரத்திலுமே தாமசிப்பதுண்டு.

பூரியில் ஐரோப்பிய வாசஸ்தலம் (English Quarters) கடற்கரை யோரமாயிருக்கின்றது. இங்கு அநேக ஓட்டல்களும், பங்களாக்களு மிருக்கின்றன. இவ்விடத்தின் சீதோஷ்ண ஸ்திதி மிகவும் ரமணீய மாகவே யிருக்கும். வியாதியஸ்தர்களும் சுகவாசிகளும் தங்கள் தங்கள் சரீரசுகத்துக்காக இங்கு வந்து வசிப்பதுமுண்டு.

புவனேச்வர் (Buvaneswar) குர்தாரோட் ஜங்ஷன் ஸ்டேஷனிலிருந்து இந்த அற்புதமான சிவக்ஷேத்திரம் 11 மைல்; மூன்றுவது வகுப்பு வண்டிக்கு 0-3-0. இந்த

க்ஷேத்திரம் ஆறு நூற்றாண்டுகளுக்கு (A. D. 500 முதல் 1130 வரை) ஒரிஸ்ஸா தேசத்திலுள்ள ஒரிஸ்ஸா-ஒட்டரம் (Orissa) சிவனை வழிபடும் கேசரி (Kesar or Lion dynasty of Orissa) வம்சத்தரசர்களுக்குத் தலைநகரமாக விருந்தது. ஒரு காலத்தில் இங்குள்ள புண்ணிய தீர்த்த மாகிய "பிந்துசாரவர்" (Bhindusaravar) என்ற தடாகத் தைச்சுற்றிலும் 7,000 ஆலயங்கள் வரை யிருந்ததாகத் தெரிய வருகிறது. அவைகளில் அழிவுற்றதுபோக தற்பொழுது 500 ஆலயங்கள் தனித்தனி விமானங்களோடு காணப்படு கின்றன.

இங்குள்ள ஆலயங்களின் கற்பணிகளும், அவை களிற் செதுக்கப்பட்டும் இழைக்கப்பட்டு மிருக்கிற சிற்ப வேலைப்பாடுகளும் பார்ப்பவர்களின் கண்களைக் கவரும்படி யாகவும், பிரமிக்கும்படியாகவுமுள்ள நேர்த்தியோடு பிர காசித்துக்கொண்டிருக்கின்றன. ஏழாவது, பன்னிரண்டா வது நூற்றாண்டுகளின் ஒட்டர தேசத்துச் சிற்பக் கைத் தொழிலின் சிறப்பைப் பிரகாசிக்கச் செய்யும்படியான நிலைமையோடும், இந்த க்ஷேத்திரத்திற்கு ஒரு ரத்னம் போன்றும் இங்குள்ள "முக்தேச்வர்" என்ற ஒரு சிறிய அழகான ஆலயம் பிரகாசித்துக் கொண்டிருக்கின்ற காட்சி தரிசிக்கத்தக்கதே. "லிங்கராஜ் மகாதேவ்" என்ற பெரிய சந்நிதி ஏழாவது நூற்றாண்டில் கட்டுவிக்கப் பட்டதாய்த் தெரியவருகிறது. இந்த ஆலயத்தைச் சுற்றிலும் அநேக ஆலயங்க ளிருக்கின்றன. தென்னாட்டில் திருநெல்வேலி ஜில்லாவில் பாளையங் கோட்டைக்குக் கிழக்கே திருச் செந்தூர் ரோட்டில் ஐந்தாவது மைலிலிருக்கின்ற "கிருஷ்ண

புரம் கோயிலின்'' கற்பணிகள் உலகத்தாரால் மெச்சத் தக்கது. நூற்றுக்கணக்கான மேல் நாட்டார் இந்த ஆலயத்தின் கற்பணிகளை வந்து பார்த்துவிட்டுப் போட்டோ எடுத்துக்கொண்டு போனதை நாம் நேரில் பார்த்திருக்கிறோம். இங்குள்ள "முக்தேஸ்வரர் ஆலயத்தின்'' கற்பணிகளை கிருஷ்ணபுரம் கோயிலின் கற்பணிகளுக்கு ஒப்பிடலாம். இங்கிருந்து மூன்று மைல் தூரத்திலுள்ள கொண்டகிரி (Khondgiri) உதயகிரி (Udaigiri) என்ற குன்றுகளின் பேரில் மூன்றுவது, நான்காவது நூற்றாண்டுகளில் புத்த மதஸ்தர்கள் வாசம் செய்ததாயுள்ள சின்னங்கள் காணப்படுகின்றன. இங்கு சில குகைகளும், பாறைகளில் வெட்டிய கோயில்களு மிருக்கின்றன.

கடகம் :—(Cuttack): புவனேச்வர் ஸ்டேஷனிலிருந்து 18 மைல். மூன்றுவது வகுப்பு வண்டிக்கு 0-6-0. ஸ்டேஷனிலிருந்து நகர் ½ மைல். நகரிலிருந்து "மஹாநதி''யின் ஸ்நான கட்டம் ½ மைல். ஸ்நான விசேடம். இங்கு சமையல் சாப்பாடு முதலியவைகள் செய்துகொள்ள தர்மசாலை வசதிகளுமுண்டு. இங்கு பாஷை ஒட்டாரம்.

கரக்பூர் (Khargpur): கடகத்திலிருந்து இந்த ஸ்டேஷன் 182 மைல். மூன்றுவது வகுப்பு வண்டிக்கு ரூ. 3-5-0. இந்த ஜங்ஷன் ஸ்டேஷனில் சென்னைப் பட்டணத்திலிருந்தும், கல்கத்தாவி லிருந்தும், பம்பாய், நாகபூரிலிருந்தும், ஆத்ரா கோமோவிலிருந்தும் வரும் புகைவண்டித் தொடர்கள் கூடுகின்றன. காசிக்கு இந்த ஸ்டேஷனிலிரு

ந்து கல்கத்தா போகாமல், ஆத்ரா, கோமோ, மொகல்சரை போயும் போகலாம். ஆனால் பெண்டு பிள்ளைகளோடும், மூட்டை முடிச்சுகளோடும் போகும் யாத்திரிகர்கள் பல இடங்களில் ஏறி இறங்கிப் போவதென்றால் கஷ்டமும் இடைஞ்சலுமாகையால் இப்பாதை சௌகரியமென்று சொல்ல முடியாது. கல்கத்தா போய்ப்போவது நிரம்பவும் சௌகரியம் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். இந்த ஸ்டேஷனிலிருந்து கல்கத்தா (Calcutta-Howrah) 72 மைல். இந்த ஸ்டேஷனில் தர்ம சாலைகளிருக்கின்றன. இங்கு பல ரெயில் தொடர்கள் வந்து சந்திப்பதாலும் ஜனங்கள் அநேகமாய் வண்டி மாறவேண்டிய பெரிய ஜங்ஷன் ஸ்டேஷனாகையாலும் கூட்டம் மிகுந்த இடம் என்று ஞாபகத்தில் வையுங்கள். யாத்திரிகர்களுக்கு தாமசிக்க வசதி குறைவுதான். நிரம்பவும் எச்சரிக்கையுடனிருத்தல் அவசியம். ஜல வசதியுண்டு.

கல்கத்தா (Calcutta): ரயில்வே ஸ்டேஷன் பெயர் ஹௌரா (Howrah); காக்பூரிலிருந்து 72 மைல். மூன்றாவது வகுப்பு வண்டிக்கு ரூ. 1-5-6. காக்பூரிலிருந்து இந்த ஹௌரா-கல்கத்தா ஸ்டேஷனுக்கு அடிக்கடி ஓய்வில்லாமல் லோகல் புகைவண்டிகள் ஓடிக்கொண்டிருக்கின்றதைப் பார்க்கலாம். ஹௌரா ஸ்டேஷனுக்குச் சமீபமாய் வடபுறம் மிக வசதியான தர்மசாலை ஒன்றுள்ளது. இங்கு யாத்திரிகர்கள் சமையல், சாப்பாடு, ஸ்நானம் முதலியன மிக வசதியாய்ச் செய்துகொள்ள சௌகரியமுண்டு. இவையன்றி பட்டணத்துக்குள் அநேக தர்ம சாலைகளுமிருக்கின்றன. தவிரவும் சோபாராம் பைஸாக் சந்தில் (Sobharam Bysack

lane) தென்னாட்டுச் சோழதேச பிராமணரின் ஓட்டல்களு மிருக்கின்றன.

இந்த அழகிய உன்னத பட்டணம் வங்காள ராஜ தானிக்குத் தலை நகரமாகவும், இந்தியாவிலுள்ள பட்டணங்களில் பிரதம பட்டணமாகவு மிருந்து ஜ்வலித்துக்கொண்டிருக்கின்றது. நீர்வளம், நிலவளம் பொருந்திய செழிப்போடு கூடிய இந்த அழகிய பட்டணத்தைத் தேவேந்திர பட்டணத்துக்கு ஒப்பிட்டு அநேக கவிஞர்கள் வர்ணித்து மிருக்கின்றனர். இந்த ரமணீயமான பட்டணம் லண்டன் மா நகரத்துக்கு இரண்டாவதாகக் கருதப்படுகின்றதென்பதை நாமிங்கு சொல்வதும் பொருத்த முடையதே. இந்த ஔரா ஸ்டேஷனுக்கும், நகருக்கும் மத்தியில் ஹூக்ளி நதி ஓடிக்கொண்டிருக்கின்றது. நதியைக்கடந்து பட்டணத்துக்குள் பிரவேசிக்க ஓர் அழகான மிதப்பு பாலம் (வாராவதி) அமைக்கப் பெற்றிருக்கின்ற காட்சி பார்ப்பவரின் கண்களைக் கவருமென்பதில் ஐயமில்லை. இப்பட்டணத்தை முழுதும் பார்ப்பதென்றால் அநேக நாட்கள் பிடிக்கும். ஆனால் முக்கியமாய்ப் பார்க்கவேண்டியதை மட்டும் இதன் கீழ் எழுதலானோம். இந்த ரமணீயமான பட்டணம் "The City of Palace" அரண்மனை மாநகரம், என்று மேல்நாட்டாரால் வர்ணிக்கப் பட்டிருக்கின்றது.

---

## PLACES OF INTEREST IN CALCUTTA.

## கல்கத்தாவில் பார்க்க வேண்டிய முக்கிய இடங்கள்.

---

1. காளி கட்டம் (Kali Ghat) காளிதேவி சந்நிதி. முக்கிய தரிசனம்.

2. சௌரங்கி ரோட்டிலுள்ள பொருட்காட்சி சாலை (Museum at Chowringhee Road)

3. ஸூலாஜிகல் கார்டன்—அலிபூர் என்னுமிடத்தில் உயிர் பிராணிகள் வைத்திருக்கும் காட்சி சாலை (Zoological Garden, Alipur).

4. பத்திரிதாஸ் ஜெயன் மந்திர்.—பலவர்ண கண்ணாடிகளினால் அற்புதமாகச் சித்திரிக்கப்பட்ட ஜெயின் மதக்கோயில். முக்கிய தரிசனம்; (Badri Dass's Jain Temple.)

5. சிப்பூர் என்ற இடத்திலுள்ள பொட்டானிகல் கார்டன். அநேகவிதமான தாவர வஸ்துக்கள் அடங்கிய சிங்காரத்தோட்டம். (Botanical Garden at Sibhpur) இங்கு ஓர் உன்னதமும், விசாலமுமான ஆலவிருக்ஷமிருப்பதைக் காணலாம். இந்த மரம் 138 வருஷங்களுக்கு முன்னதாகவே யிருந்து வருகிறதாகவும், ஒரு காலத்தில் ஒரு பெரிய சைனியம் இதன் கீழ் தங்குவதற்கு இடம் கொடுத்ததென்றும் சொல்லத் தெரிய வருகிறது.

6. புதியமார்க்கட். (New Market) இந்த அழகான சந்தையைப்போல் இந்தியாவில் வேறெங்கும் காணப்படாதென்று திட்டமாய்ச் சொல்லலாம். இந்த மார்க்கெட்டின் அழகை வர்ணிப்பதென்றால் காளிதாசனைப் போன்ற கவிஞர்களைத்தவிர ஏனையோர்களால் வர்ணிக்கச் சாத்தியப்படாதென்பது எமது துணிவு.

கயா (Gya) ஹௌரா-கல்கத்தா ஸ்டேஷனிலிருந்து 292 மைல். காசியிலிருந்து 134 மைல்; மூன்றாவது வகுப்பு வண்டிக்கு கல்கத்தாவிலிருந்து 4-2-6; காசியிலிருந்து 2-2-9; கல்கத்தாவிலிருந்து மாலை 6-36-க்குப் புறப்படுகிற பம்பாய் மெயில் (Bombay Mail) என்ற புகைத்தொடரில் பிரயாணமானால் மத்தியில் வண்டிமாறாமல் அன்றிரவு 3 மணிக்கு கயா ஸ்டேஷன் சேர்ந்துவிடலாம். காசிக்ஷேத்திரம் தரிசனத்திற்கு எப்படி மகிமையுள்ளதோ அதேமாதிரி பிதுருக்கள் நற்கதியடைவதற்குப் பிண்டப் பிரதானம் செய்யவேண்டிய முக்கிய க்ஷேத்திரமுமிதுவே. இந்த க்ஷேத்திரத்தைப் பற்றியுள்ள மகிமைகளை வாயுபுராணத்திலும் கருடபுராணத்திலும் மிக விரிவாய்க் காணலாம். இந்த ஸ்டேஷன் பிளாட்பாரத்தை விட்டு வெளிவந்ததும் அங்கு யாத்திரிகர்களை அழைத்துக்கொண்டு போவதற்காகக் காத்திருக்கும் கயாவாளிகளுடைய குமாஸ்தாக்களின் கூட்டத்தைப் பார்க்கலாம். ஸ்டேஷனிலிருந்து ½ பர்லாங்கு தூரத்தில் ஒரு தர்மசாலை உண்டு. அங்கு பலதேசத்து யாத்திரிகர்களின் கூட்டம் கணக்கிடமுடியாது. இந்த தர்மசாலை கொஞ்சமும் வசதிப்படாதென்றே சொல்வோம். ஒரு சமயம் இந்த ஸ்டேஷனில்

இராக்காலங்களில் யாத்திரிகர்கள் வந்துவிட்டால் இந்த தர்மசாலையில் தங்கவேண்டி வரும். அம்மாதிரியுள்ள சமயத்தில் மிகவும் சாக்கிரதையாக விருத்தலவசியம். ஸ்டேஷனிலிருந்து கயா என்ற பிரசித்தியுள்ள பட்டணம் மூன்று மைல். இங்கு யாத்திரிகர்களுக்குக் கயாவாளியென்ற புரோகிதர்களாற் சப்ளைசெய்யும் ஜாகை வசதிகளைத் தவிர வேறு வசதியான தர்மசாலைகளாவது, வாடகை ஸ்தலங்களாவது கிடையா; இந்த மஹத்தான கயா க்ஷேத்திரம் பூர்வத்தில் மகிமைபெற்ற மிதிலைநாட்டைச் சேர்ந்த உன்னத பட்டணங்களிற் சிறந்ததாகையால் இப்பட்டணத்தைச் சுற்றிலும் இராஜசிருதி, சவனுகிரமம், புனப்புனகாந்தி லோகாதண்டம், வைகுண்டம் என்ற நாமங்களுடைய அநேக திவ்விய ஸ்தலங்களும், தீர்த்தங்களு மிருக்கின்றன. மகததேசம் ஆதியில் ஜனகர், அசோகர் முதலான மன்னர்களாற் செங்கோல் செலுத்தப்பட்டுவந்தது. இதன்றி சிதாபிராட்டியார் ஜனித்த கர்ப்ப ஸ்தானமும், கடைசியாக பௌத்த மதத்தை ஸ்தாபித்த மஹா புத்தருடைய ஜனன ஸ்தானமு மிதுவே. இந்த பட்டணம் ஐக்கிய மாகாணத்தைச் சார்ந்த ஒரு முக்கிய ஜில்லாவாகவும் விளங்குகின்றது.

இந்த பட்டணம் சாகேப்கஞ்ச் (Sahebganj- English quarter) இலஹாபாத் (Elahabad-Native quarter) என இரண்டு பிரிவுகளாக வகுக்கப் பட்டிருக்கின்றது இலஹாபாத் என்ற பகுதியின் கிழ்ப்பக்கமாய் மகிமையுள்ள பல்குனி நதி உத்தரவாகினியாக ஓடிக்கொண்டிருக்கின்றது. இப்பகுதியில் தான் இந்து மதாலயங்களும்,

கயாவாளி என்ற புரோகிதர்களின் உன்னத மேடை மாடி வீடுகளும், கடைகளு மிருக்கின்றன. இங்குள்ள ரோட்டு கள் வளைந்து வளைந்து போகும் சந்துகளாகவே காணப் படும். எந்த வீதிகளைப் பார்த்தாலும் நடைக்கல் பரப்பி யிருப்பதையும் பார்க்கலாம். ரெயில்வே ஸ்டேஷனுக்கும் இலஹாபாத் என்ற பகுதிக்கு மிடையே சாகேப்கஞ்ச் என்ற பகுதியிருக்கின்றது. இங்குள்ள ரோட்டுகள் அழ காயும் விசாலமாகவு மிருக்கும்.

இதுதான் ஐரோப்பியரின் வாசஸ்தலம்; நீதி ஸ்தலங் கள், தபால் தந்தி ஆபீஸ்கள், ஆஸ்பத்திரி, போலீஸ் கோர்ட்டுகள், பாடசாலை முதலியன அடங்கியுள்ளன. இந்தப் பட்டணத்தைச் சுற்றிலும் ஒருவித கருங்கற் குன்று கள் விசேஷமாயிருப்பதால் அந்தக் கற்களைக்கொண்டு பல விதமான கற்பாத்திரங்களாகவும் சிற்பாலங்காரமான பற்பல மூர்த்திகளாகவும், ஔஷதங்கள் அரைக்கும் கலுவங்களாக வுஞ் செய்வித்து எவரும் அதிசயிக்கத்தக்கவாறு மிகக் குறைந்த விலைக்கு விற்றுவருகிறார்கள். இந்த க்ஷேத்தி ரத்தை அடுத்த பல்குனி நதியின் கரை ஓரத்தே விஷ்ணு பாதம் யென்ற திவ்விய ஆலயம் பிரகாசித்துக் கொண் டிருக்கின்றது.

ஆலயத்தின் மூலஸ்தானத்தில் மூன்று கெஜம் சுற்றள வுள்ள ஒரு கல்தொட்டி காணப்படும். அந்தத் தொட்டி யின் நடுவில் இரண்டு பாதங்கள் செதுக்கப் பட்டிருக் கின்றன. அவையே விஷ்ணுபாதம் எனச் சொல்லப்படு கின்றன. ஆலயத்தின் முக்திமண்டபம் மிக விசாலமானதே.

இந்த மஹத்தான ஆலயம் இராணி அகல்யாபாய் அவர்கள் கட்டிவைத்ததாய்த் தெரிகிறது. இந்த க்ஷேத்திரத்தில் வந்து சிரார்த்தம் முதலிய பிதிர்க்கடனை நிறைவேற்றும் யாத்திரிகர்கள் முதல் நாள் இந்த விஷ்ணுபாதத்தில் வந்துதான் பிண்டம் போடுகிறார்கள். இங்கு கயா சிரார்த்தம் மூன்று வகையாகச் செய்கின்றனர்:—1 விஷ்ணு பாதம், 2 பஞ்சகயா, 3 அஷ்டகயா. எல்லாம் பணத்தைப் பொறுத் திருக்கின்றன. யாத்திரிகர்கள் தத்தம் சக்திக் கேற்றபடி இம் மூன்றில் ஒன்றைச் செய்துவிட்டுப் போகலாம். கட்டாயமில்லை. பல்குனி நதியில் மழைக்காலந் தவிர மற்றைய காலங்களில் ஜலக்கஷ்டம். இந்தப் பட்டணத்தில் அநேகமாய்க் கிணற்று ஜலத்தையே உபயோகிக்கிறார்கள். குழாய் ஜல வசதியுமுண்டு.

புத்தகயா அல்லது தர்மாரணியம்:—இந்த புத்தமத க்ஷேத்திரம் கயாவிலிருந்து 8 மைல். நல்ல கல்ரோட். இரட்டைக் குதிரை கட்டிய கோச் வண்டிகள் கிடைக்கும். இந்த க்ஷேத்திரந் தான் ஆதிபுத்ததேவர் ஜனித்த கர்ப்பஸ்தானமென்றும், தேகபிரம்மவாதத்தைப் போதித்த இடமென்றும் தெரியவருகிறது. இங்கு இந்திய சிற்பசாஸ்திர விதிப்படி அமையப்பெற்ற ஓர் அழகான புத்தமத ஆலயமிருக்கின்றது. இதன் உயரம் 180 அடி. இந்த ஆலயத்தில் ஜப்பான் தேசத்திலிருந்து கொண்டுவந்த மிக அற்புதமான பௌத்த விக்கிரக மொன்று பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. ஆலயத்தின் மேற்பிரகாரத்தில் "பவுத்ததரு"–அரசமரம் ஒன்று காணப்படுகின்றது. இந்த அற்புத விருக்ஷம் பல தடவை

களி லழிக்கப்பட்டும், எரிக்கப்பட்டும் அழியாது திரும்பவும் முன்போலவே ஓங்கி வளர்ந்து பிரகாசித்துக்கொண்டிருக்கின்றது. ஆலயத்தின் சமீபத்திற் சில புத்த மடங்கள் இருக்கின்றன. அங்கே பல புத்தமத சந்நியாசிகள் வசித்து வருகின்றனர்.

டேரி-ஆன்-ஸோன் :—(Dehri-on-sone) கயாவிலிருந்து 53 மைல்; மூன்றுவது வகுப்பு வண்டிக்கு 0—13—3. இங்கு சோணபத்திராநதி தீர்த்த விசேடம். இந்த சோணபத்திரா நதியின் பாலம் (Sone Bridge) இந்தியாவிலுள்ள வாராவதிகளி லெல்லாம் அதிக நீளமுள்ளது. உலகத்திலுள்ள வாராவதி (பாலம்) களிலெல்லாம் மிகவும் நீளமுள்ளது ஸ்காட்லண்டு தேசத்திலுள்ள "டே" நதியின் பாலம். இந்த சோன் வாராவதி இரண்டாவதாகக் கருதப்படுகிறது.

மோகல்சராய் (Mogulsarai) டேரி-ஆன்-ஸோன் என்ற ஸ்டேஷனிலிருந்து 84 மைல். மூன்றுவது வகுப்பு வண்டிக்கு 1-2-0. மகமதிய அரசாங்கத்தில் இதை மொகலாய அரசர்கள் வாசஸ்தலமாக வைத்திருந்த படியால் மொகல்சரை யென்ற பெயருண்டாயிற்று. இது ஒரு பெரிய ஜங்ஷன் ஸ்டேஷன். கல்கத்தாவிலிருந்தும் பம்பாய் முதலிய விடங்களிலிருந்தும் லட்சுமணபுரி, காசி முதலிய விடங்களிலிருந்தும் வரும் புகைவண்டித் தொடர்கள் இங்கு வந்து கூடுகின்றன. காசிக்குப் போக வேண்டியவர்கள் இந்த ஸ்டேஷனில்தான் வண்டி மாறவேண்டும். இதிலிருந்து காசி ஸ்டேஷன் 7 மைல். மூன்றுவது வகுப்பு வண்டிக்கு 0-3-0.

பிரயாகை (Prayag-Daraganj): என்பது இந்துஸ்தானிபெயர்; இங்கிலீஷில் தாராகஞ்ச் என்று பெயர். இந்த தாராகஞ்சுக்குச் சமீபத்தில் (Izat Bridge) ஐசெற்று பிரிட்ஜ் என்ற ஸ்டேஷனிருக்கின்றது. காசி கண்டோன்மெண்டு ஸ்டேஷனிலிருந்து ஐசேற்று பிரிட்ஜ் என்ற ஸ்டேஷன் 74 மைல். மூன்ருவது வகுப்பு வண்டிக்கு சார்ஜ் 1-3-0. இந்த ப்ரயாகை ஸ்நான விசேடமுள்ள முக்கிய க்ஷேத்திரம்; விசேட ஸ்நானகட்டம் திருவேணி*

* "குலடங்கேச ரெதிர்பிரயாகை துளையினு மாவயிற்கங்கை
சிலமார்யமுனை சங்கமமுழுகிற் சிதைதருங் கருப்படுமவத்தை

மஹா சிரேஷ்ட புண்ணிய நதியாகிய கங்கை, யமுனை, சாஸ்வதி என்ற மூன்று நதிகளும் ஒன்றுகூடு மிடத்துக்குத் "திருவேணி" என்ற நாமம். இந்த விடத்தில் ஸ்நானம் செய்வதினுல் பிறவித் துன்பங்கள் நீங்குமேன்பது திண்ணம். இந்த இடத்தில் கங்கை பச்சிம வாகினியாகவும், யமுனை பூர்வ வாகினி யாகவும், சாஸ்வதி அந்தர வாகினி யாகவும் வந்து ஒன்று கூடுகின்றன. யாத்திரிகர்கள் சுத்தகங்கை எடுத்துப்போவது இந்த க்ஷேத்திரத்திலே தான்.

இந்த க்ஷேத்திரத்துக்கு யாத்திரை வருகிறவர்கள் தாமசிக்கப் போது ஸ்தலம் கிடையாது. வாடகை ஸ்தலம் கிடைக்கும். ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து பிரயாகை ஒரு பர்லாங்கு தான். இவ்விடத்தில் பிரயாகைவாளி என்ற பண்

---

* காசிரகசியம், சத்தபுரிமகிமை.

டாக்கள் வீட்டில் ஜாகை எற்படுத்திக் கொள்ளலாம். இவ்விடத்தில் முக்கியமாய்த் தரிசிக்கவேண்டிய இடங்கள்.

திரிவேணிம்-மாதவம்-சோமம்
பாரத்வாசஞ்ச-வாஸுகிம்
வந்தே அக்ஷயவடம்-சேஷம்
பிரயாகம்-தீர்த்தநாயகம்.

1-திருவேணி ஸ்நானம், 2-மாதவம் என்ற விஷ்ணு ஆலயம், 3-யமுனையின் கிழ்கரையில் சோமேச்வரர் லிங்கம் 4-பரத்துவாசர் ஆச்ரமம். இங்கு ஸ்ரீராமர், லட்சுமணர், சீதா தேவிகளின் ஆலயம். ஸ்ரீராமர் வனவாசம் விட்டுத் திரும்பும்போது இந்த ஆச்ரமத்தில் விருந்துண்டு போனதாய்ச் சொல்லப் படுகிறது. 5-வாஸுகி என்ற சர்ப்பதரிசனம், 6-கோட்டைக்குள் அக்ஷயவடம், 7-சேஷேச்வரர் என்ற லிங்கம்.

திருவேணி ஸ்நானம் செய்து திரும்பும் வழியில் பாதாள அனுமாரின் தரிசனம். கோட்டைக்குள் பஞ்ச பாண்டவர்கள் முதலிய மூர்த்திகளின் தரிசனம். இந்த மகிமையுள்ள பிரயாகை க்ஷேத்திரத்தைப் பற்றியுள்ள முழு விவரமும் இனி நாம் அச்சிடப்போகிற "பிரயாகை மஹத்துவம்" என்ற புத்தகத்தில் விரிவாய்க் காண்க.

அயோத்தி (Aiodhya): இது பிரயாகையிலிருந்து 97 மைல். 3-வது வகுப்பு வண்டிக்கு 1-9-0. காசி கண்டோன்மெண்டு ஸ்டேஷனிலிருந்து 121 மைல். 3-வது வகுப்பு வண்டிக்கு 1-13-0. ஸ்டேஷனிலிருந்து பட்டணம் 3 மைல். நயாகாட் ரோட்டில் ஒரு தர்மசாலை யிருக்கின்றது.

விசாலமான ஸரயு நதியை உடைத்தான இந்தப்பட்டணம் ஒரு காலத்தில் 96 மைல் விஸ்தீரணத்தோடு கூடி ஜ்வலித்துப் பிரகாசித்துக் கொண்டிருந்த தென்று சொல்லப்படுகின்றது. ஸ்ரீ ராம பிரான் மஹாவிஷ்ணுவின் அவதாரத்தோடு கூடி ஜனித்த கர்ப்பஸ்தானமு மிதுவே. புராதனமான பட்டணம் முழுதும் அழிந்து காடாகப் போனதாயும் கி. மு. 57-ல் விக்கிரமாதித்ய அரசனால் இப்போது காணப்படும் பட்டணம் நிர்மிக்கப்பட்டதாயும் தெரியவருகிறது. சூர்யவம்சத்தரசர்களில் 56-வது தலைமுறையில் அரசுபுரிந்த தசரத சக்கரவர்த்தியின் தலைநகரமு மிதுவே. ஆதியில் புத்தமதத்திற்குக் கோசலநாடு தாய்வீடாக இருந்தது. எழாவது நூற்றாண்டில் சைனாதேசத்து யாத்திரிகர் ஹூயின்த்ஸாங் (Huen Thsang) என்பவர் அயோத்தியாபுரி பட்டணத்தில் 20 புத்தமத கோயில்களும் 3,000 புத்தமத சந்நியாசிகளுமிருந்ததைப் பார்த்ததாகத் தம் புத்தகத்தில் எழுதியுள்ளார்

ஸ்ரீராமமூர்த்தியின் ஜன்ம பூமி. ஸ்வர்க்கத்துவார் என்ற மஹத்தான இடங்களை அப்புறப்படுத்தி அவ்விடங்களில் அவரங்கசிப் என்ற மகமதிய அரசர் மசூதிகள் கட்டிவைத்த கொடுமைகளை இன்றும் பார்க்கலாம்.

என்ன விந்தை! இந்த அரசரின் விபரீத புத்தி நம்மவர்களின் ஆலயங்களையும், மூர்த்திகளையும் நிர்மூலப்படுத்தத் துணிவு கொண்டது. இறைவன் திருவருள் மகிமையால் நமது காருண்ணிய ஆங்கில கவர்ன்மெண்டார் வந்து துக்கத்தில் ஆழ்ந்துகிடந்த நம்மவர்களைக் கரையேற்றி க்ஷேமமடையச் செய்தனர்.

இந்த க்ஷேத்திரத்தில் சித்திரைமாதம் நடைபெறும் ஸ்ரீராம நவமி உற்சவத்தின்போது லக்ஷக்கணக்கான ஜனங்கள்கூடுவர். ஸரயு நதிக்குப் போகும் நயாகாட் ரோட்டில் நாட்டுக்கோட்டை நகரச் சத்திரமிருக்கிறது. யாத்திரிகர்களுக்கு இங்குள்ள பண்டாவால் தரிசனஞ் செய்துவைக்கப்படுகிற ஸ்தலங்கள் :—

1 ஸ்ரீராமபிரான் ஜனித்த கர்ப்பஸ்தானம், 2 அயோத்தியாபீடம், 3 ரத்னமண்டபம், 4 கனக மண்டபம், 5 தர்ம ஸ்தானம், 6 பிராட்டியார் பாகசாலே, 7 பொக்கிஷ சாலே, 8 அக்கினிகுண்டம், 9 உத்யானவனம், 10 அகஸ்தியாச்ரமம். 11 சுக்ரீவ அங்கதாதி ஸ்தானம், 12 வசிஷ்ட ஸ்தானம், 13 அநுமந்த குண்டம், 14 சுசேந்திர குண்டம், 15 சீதாகூபம், 16 சுக்ரீவ குண்டம், 17 விபீஷண குண்டம், 18 வித்தியா குண்டம், 19 சீதா குண்டம், 20 கர்ச்சு குண்டம், 21 சக்கிர தீர்த்தம், 22 ரணவிமோசன தீர்த்தம், 23 துர்க்கா குண்டம், 24 நாகர் குண்டம், 25 வால்மீகி தீர்த்தம், 26 நாராயண குண்டம், 27 தங்கராமர் ஆலயம். இம்மாதிரியாக அனேக விடங்களைக் காண்பிக்கின்றார்கள். ஆஞ்சனேயர் சந்நிதி மிகப் பிரசித்தி யுள்ளது. இச்சந்நிதியின் முன்பு சதாகாலமும் ஸ்ரீமத் ராமாயண காலக்ஷேபம் நடந்துகொண்டிருப்பதைப் பார்க்கலாம். இச்சந்நிதியில் கொழுத்துப் பருத்த அனேக வானரக்கூட்டங்கள் யாத்திரிகர்களின் வரவை எதிர்நோக்கிய கண்களோடு நின்றுகொண்டிருப்பதை நம்மவர்கள் பார்த்து ஆச்சரியப்படலாம். இவ்வானரக் கூட்டங்கள் யாத்திரிகர்களிடம் தின்பண்டம், அன்னம் முதலி

யவைகளை வாங்கித்தின்றுகொண்டு ஸ்திரமாக இச்சந்நிதியிலேயே வாசஞ்செய்து வருகின்றன. இந்த வானரக்கூட்டங்களுக்கு அங்கு செல்லும் யாத்திரிகர்கள் ஒன்றுங் கொடாது போவார்களே யாகில் யாத்திரிகர்கள் கையிற் கொண்டுபோகும் தின்பண்டம், சாமான் முதலியவைகளை அவ்வானரக் கூட்டங்கள் திரமாகப் பறித்துக்கொண்டு போய் விடுமென்பது நிச்சயம். இங்குள்ள வானரங்களின் கூட்டம் பார்க்கப் பயங்கரமாகவும், வேடிக்கை யாகவுமிருக்கும். இச்சந்நிதிக்குச் செல்லும் யாத்திரிகர்கள் மிகவும் எச்சரிக்கையோடு போகவேண்டும். இந்தப் பட்டணத்தில் கிரகங்கள்தோறும் ஸ்ரீராமபிரானை விக்கிரக ரூபமாக எழுந்தருளச் செய்து ஆராதித்து வருவதைப் பார்க்கலாம். விசாலமான ஸரயு நதிக்கரை யோரமாய் ஸ்ரீ காசியிலிருப்பது போலவே அனேக ஸ்நான கட்டங்களும், படித்துறைகளும், பூஜை மடங்களும், மாடி வீடுகளும் இருக்கின்றன. ஸரயு நதியில் ஆமைகள் ஜாஸ்தி. ஆனால் அவைகளால் ஸ்நானஞ் செய்பவர்களுக்கு உபத்திரவ மில்லை. முன்பின் பார்த்திராத ஜனங்கள் ஸ்நானம் செய்யும்போது கவனமாகவே ஸ்நானம் செய்த லவசியம்.

நந்திக்கிராமம்: இந்த க்ஷேத்திரம் அயோத்தியிலிருந்து 14-மைல். நல்ல கல்ரோட்டு; பிரயாகைக்குப் போகும் கால் நடை ரஸ்தா. அயோத்தியிலிருந்து இந்த க்ஷேத்திரத்திற்குப் போவதற்கு இரட்டைக் குதிரை கட்டிய கோச்சு வண்டிகள் கிடைக்கும்; வண்டிக்கூலி போகவர ரூ. 3 முதல் ரூ. 5 வரை கொடுக்கவேண்டும். இங்கு அழ

கான படித்துறைகளோடு கூடிய பாரதகுண்டம் என்ற ஒரு பெரிய தடாக மொன்றுளது. தடாகத்தின் மேல்கரையில் காளி சந்நிதியும் கௌரிசங்கர் மஹாதேவ சந்நிதியு மிருக்கின்றன. தடாகத்தின் தென்பக்கம் கயாகுண்ட மிருக்கிறது. அங்கு போகும் யாத்திரிகர்கள் பிதிர்க்களுக்கு பிண்டப் பிரதானஞ் செய்து போகிறார்கள். ஸ்ரீராமபிரான் வனவாசஞ் சென்றிருந்த காலத்தில் அவரது ஆக்ஞைப்படி இவ்விடத்தில் ஸ்ரீ பரதர் ஸ்ரீ ராமபிரானின் பாதுகையை சிம்மாசனத்தி லெழுந்தருளச் செய்து அரசாண்ட இடமும் இதுவெனச் சொல்லுகிறார்கள்.

பைஸாபாத்—(Fyzabad):—இது அயோத்தியிலிருந்து நான்குமைல். நந்திக் கிராமத்துக்கு இந்த பைஸாபாத் வழியாகத்தான் அயோத்தியிலிருந்து போகவேண்டும். நல்ல கல்ரோடு. இது ஒரு பெரிய அழகான பட்டணம். பட்டணத்தின் வடபுறம் ஒரு மைல் தூரத்தில் ஸரயு நதி யோடுகின்றது. அவ்விடத்தில் குப்தார்காட் என்ற நாமத்தை யுடைய ஸ்நான கட்டமிருக்கின்றது. இவ்விடத்தில் அசோக மரம் ஒன்று நிற்பதைக் காணலாம். இந்த குப்தார் கட்டிடத்தில் தான் (குப்தம்-மறைவு) ராமபிரான் மறைந்து விட்டதாய்ச் சொல்லப்படுகின்றது. யாத்திரிகர்கள் இந்தக் கட்டத்தில் வந்து விசேடமாய் ஸ்நானம் செய்து போகிறார்கள்.

லக்ஷ்மணபுரி (Lucknow) (லக்நௌ): அயோத்தியிலிருந்து 85 மைல். மூன்றாவது வகுப்பு வண்டிக்கு ரூ. 1-1-3. இது ஓர் அழகான பெரிய பட்டணம். இந்

தியாவிலுள்ள முக்கிய பட்டணங்களில் இந்தப் பட்டணம் நான்காவதாகக் கருதப்படுகின்றது; அவையாவன : கல்கத்தா, பம்பாய், சென்னை, லக்ஷ்மணபுரி. இந்தப்பட்டணத்தில் யாத்திரிகர்கள் தங்குவதற்கு சராய் (Saray) என்று சொல்லுகிற வாடகை ஸ்தலங்கள் வசதியாகக் கிடைக்கும். ஜலவசதியும் குதிரை வண்டிகளின் வசதியுமுண்டு. இந்தப் பட்டணத்தினருகே கோமதி நதி ஓடுகின்றது. ஸ்நான விசேஷம். நகரின் மத்தியில் பைரவர் சந்நிதியும், வெள்ளையரசு மிருக்கின்றன. அவசியமாகப் பார்க்கவேண்டிய பட்டணமென்றே சொல்லலாம்.

மோராதாபாத் (Moradabad) லக்ஷ்மணபுரியிலிருந்து 202 மைல். மூன்றாவது வகுப்பு வண்டிக்கு ரூ. 2—1—0. ஸ்டேஷனுக் கெதிரில் தருமசாலை ஒன்றுள்ளது. சமையல் சாப்பாட்டுக்கு மிகவும் வசதி உண்டு. ஸ்டேஷனிலிருந்து நகர் இரண்டு மைல். இங்கு ராமகங்கா என்ற புண்ணியநதி ஓடுகின்றது. ஸ்நான விசேடம். இந்த ஊர் முலாம்பூசின அழகான பித்தளைப் பாத்திரங்களுக்குப் பேர்போன இடம்.

ஹரித்துவாரம் (Haridwar): காசியிலிருந்து வடமேற்கே 502 மைல் தூரத்திலிருக்கின்றது. மூன்றாவது வகுப்பு வண்டிக்கு ரூ. 4-8-0. ஸ்டேஷனிலிருந்து பட்டணம் அரைமைல். இந்த க்ஷேத்திரத்திற்கு மாயாபுரி யென்ற பெயருமுண்டு. சப்த புரிகளில் ஒன்றாகிய இந்த மகத்தான க்ஷேத்திரம் வரை பாகீரதையென்ற கங்கா நதி உன்னதமான இமைய மலையின் மீது ஓடிவந்து இந்த க்ஷேத்திரத்

தில் வந்தும் சமபூமியில் ஓடிச் செல்வதால் கங்காத்துவார மென்ற பெயரும் பொருத்த முடையது.

பத்ரிநாராயணம், கங்கோத்திரி, கேதாரம் முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களுக்குப் போகும் யாத்திரிகர்கள் இந்த க்ஷேத்திரம் வந்துதான் போகவேண்டும். இந்த க்ஷேத்திரத்தில் கங்காநதி வடக்கிலிருந்து தென்மேற்காக ஓடிச் செல்கின்றது. இவ்விடத்தில் முக்கிய ஸ்நான கட்டங்கள் (1) ஹரிஸரன்காட், கட்டத்தின் சமீபத்தில் கங்கா தேவி ஆலயமும் ஸ்ரீ விஷ்ணுபாதமு மிருக்கின்றன ; (2) குசாவர்த்தகாட். இந்த க்ஷேத்திரத்தில் முக்கியமாய்த் தரிசிக்கவேண்டிய சந்நிதிகள் :—1 நீலபர்வதம். 2 சாமுண்டி தேவி. 3 பில்வகேத் மஹாதேவ். 4 மாயாதேவி. 5 சரவணநாத் சந்நிதி. 6 ராஜா தக்ஷப் பிரஜாபதி கோயில். 7 ராஜா தக்ஷப்பிரஜாபதி யாககுண்டம். 8 * சதிகுண்டு. 9 தென் கிழக்கில் இரண்டுமைல் தூரத்திலுள்ள கன்கல் என்றவிடத்தில் கபில முனீச்வரர், சுகப்பிரம்ம யோகீச்வரர் முதலியவர்களின் வாசஸ்தலம். முக்கியமாய்த் தரிசிக்க வேண்டியது. யாத்திரிகர்கள் சுத்த கங்கை இவ்விடமிருந்தும் எடுத்துப் போகலாம். மிகவும் உத்தமம்.

இங்கு யாத்திரிகர் வசதியாகத் தங்குவதற்கு அநேக தர்ம சாலைகளும், வாடகை ஸ்தலங்களு மிருக்கின்றன. இந்த

---

* சதிகுண்டு—ராஜா தக்ஷப்பிரஜாபதி பிரசித்த யாகஞ்செய்த காலத்தில், தேவியை அழைக்காததாலும், பரமசிவனை நிந்தித்ததாலும் அச்சதிதேவி மனக்கிலேசமுற்று உயிர்துறந்த இடமிதுவெனச் சொல்லப்படுகிறது.

க்ஷேத்திரத்திலும், காசி, பிரயாகை முதலிய விடங்களிலிருக்கின்றது போல பண்டாக் களிருக்கின்றனர். வடநாட்டிலுள்ள புண்ணிய க்ஷேத்திரங்களில் பண்டாக்கள், வண்டிக்காரர்கள், கூலிக்காரர்கள் முதலியவர்களின் தொந்தரவு அதிகமென்றே சொல்லவேண்டும். எதுவும் யாத்திரிகர்களின் சாமர்த்தியத்தைப் பொருந்தி யிருக்கின்றது.

மொராதாபாத் ஸ்டேஷனிலிருந்து ஹரித்துவாரம் 103 மைல். 3-வகை வகுப்பு வண்டிக்கு 0-15-6. ஹரித்துவாரம் போகிறவர்கள் லக்ஸார் ஸ்டேஷனில் வண்டி மாறவேண்டும். (Lhaksar to Haridwar 16 Miles) லக்ஸாரிலிருந்து ஹரித்துவாரம் 16 மைல்.

குருக்ஷேத்திரம்: செயில்வே ஸ்டேஷன் பெயர் தனேச்வர் (Thanesvar) ஹரித்துவாரத்திலிருந்து தனேச்வர் ஸ்டேஷன் 126 மைல். மூன்றுவது வகுப்பு வண்டிக்கு 1-11-0. ஸ்டேஷனிலிருந்து குருக்ஷேத்திரம் என்ற புண்ணிய ஸ்தலம் 2 மைல். இங்கு எக்கா என்ற ஒற்றைக் குதிரை கட்டிய வண்டிகள் கிடைக்கும். ஒரு தருமசாலையு மிருக்கின்றது. சமீபத்தில் கிணறு ஒன்றுள்ளது. வசதியென்று சொல்ல முடியாது. இந்தத் தருமசாலையில்லாமல் பண்டாக்களின் ஜாகைகளிலும் தங்கலாம். தண்ணீர் வசதி மிகவும் குறைவு. இந்த க்ஷேத்திரத்தில் தரிசிக்கவேண்டிய இடங்கள் அங்குள்ள பண்டாக்கள் சொல்லுகிறதைக் கேட்டால் கணக்கிலடங்காது. யாத்திரிகர்களுக்கு, அதுவும் இந்துஸ்தானி பஷை தெரியாதவர்களுக்கு மிகவும் கஷ்டமே. யாத்திரிகர்கள் இந்த

மஹத்தான க்ஷேத்திரத்தில் வந்து க்ஷேத்திரத்தைத் தரிசிப்பதே உத்தமம். பண்டாக்கள் காண்பிக்கக்கூடிய இடங்களைப் பார்க்க விரும்பினால் மைல் கணக்காக காடெல்லாம் கொண்டு போய் அலைத்துவிடுவார்கள். நடந்துபோய் பார்க்கக்கூடிய இடங்களல்ல. எக்கா வென்ற குதிரைவண்டியில் போனால் காலை 8-மணிக்குப் போனால் மாலை 4 மணி வரை காடெல்லாம் சுற்றி வரவேண்டும். மஹா பாரதத்தின் கதைகளை ஒன்றுகூடவிடாது பாடம் சொல்வதைக் கேட்கலாம். நாம் நேரில் போயிருந்த சமயம் அனுபவித்த சம்பவத்தை முன்னிட்டு, இவ்வளவு எழுத ஏற்பட்டது. முக்கியமாக ஸ்நானம் செய்யவேண்டிய இடம் புஷ்கரணி என்ற தாமரைத் தடாகம், ஸ்நானவிசேஷம். தனேச்வர மஹாதேவ் தரிசன விசேடம். இவையன்றி பண்டாக்களால் சொல்லப்படும் ஸ்தலங்கள் இதனடியிற் காண்க—லக்ஷ்மி குண்டு, பத்திரகாளி ஆலயம், தர்க்ககூவ், சதுர்முக பிரம்ம தீர்த்தம், பிராயசீர்தீர்த்தம், சரஸ்வதிநதி, குபேர் குண்டு, சூரஸ் குண்டு, பாணகங்காதீர்த்தம், ஜோதீச்வர், பீஷ்மாச்சாரி, சரசயனம், ஆத்மகயா முதலிய பல உண்டு. ஸ்ரீ பகவான் அர்ச்சுனனுக்குப் பகவத்கீதையை உபதேசித்த இடமென ஜோதிச்வர் என்ற இடத்தைக் காண்பிக்கின்றனர். இந்த இடத்தில் ஓர் ஆல விருக்ஷமிருக்கின்றது. இதனடியில் ஒரு கல்லிற் பாதம் செதுக்கப் பட்டிருப்பதையும் காணலாம்.

டேல்லி(Delhi): இந்த அழகான புராதன பட்டணம் தனேச்வர் ஸ்டேஷனிலிருந்து 97 மைல். 3-வது வகுப்பு வண்டிக்கு ரூ. 1-4-6. ஹரித்துவாரமிருந்து குரு-

க்ஷேத்திரம் போகாமல் டெல்லிக்குப் போக வேண்டுமானால் லக்ஸேர் மொராதாபாத் வழியாக 205 மைல்; மூன்றாவது வகுப்பு வண்டிக்கு 1-15-0. இந்தப் பட்டணம் யமுனைக்கரை யோரமாயுள்ள ஓர் உன்னத பட்டணம் என்பதை நாம் சொல்லாமலே தெரிந்துகொள்ளக் கூடும். இது ஆதியில் பஞ்சபாண்டவர் களுக்குத் தலை நகரமாய் இருந்த தென்பதை மஹா பாரதத்திற் காணலாம். பின்பு மகமதிய அரசர்கள் காலத்திலும் தலைநகரமாக விருந்தது. நம் மாட்சிமைதங்கிய ஜார்ஜ் மன்னருக்கு இந்த அழகான பட்டணத்தில் 1911-ம் வருடத்தில் முடிசூட்டு வைபவம் நடந்தேறியதுமுதல் இது இந்தியாவின் தலை நகரமாக ஏற்பட்ட தென்பதையும் யாவரும் அறிந்துள்ளார். தலை நகரமாக அமையப்பெற்ற இந்த அழகிய நகரத்தை வர்ணிப்ப தென்றால் பொன்னுக்குப் பொன்னிடுவதை ஒக்கும். ஸ்டேஷனிலிருந்து 2 பர்லாங்கு தூரத்தில் மிக வசதியான தர்மசாலைகளும், வாடகை ஸ்தலங்களு மிருக்கின்றன. இவ்விடங்களில் வாடகை ஸ்தலங்களுக்கு சரை Sarai என்று பெயர் வழங்கி வருகின்றது. இந்த அழகான பட்டணத்தில் பார்க்க வேண்டிய முக்கிய இடங்களில் யமுனைக் கரை யோரமாய் அமைந்துள்ளதும் அநேக அற்புதங்களடங்கியது மான Fort கோட்டையும் ஒன்றுண்டு.

மதுரா-Muttra: டில்லியிலிருந்து 87 மைல். மூன்றாவது வகுப்பு வண்டிக்கு ரூ. 1-4-9. இந்தப் புண்ணியக்ஷேத்திரம் யமுனை நதிக்கரை யோரத்தே யுள்ளது. ஸ்ரீ




Visranth Ghat, Mathura விஸ்ராந்தகாட், மதுராபுரி பட்டணம்.

கிருஷ்ண பகவானின் திருவிளை யாட்டுகளுக் கெல்லாம் இருப்பிடமாயிருந்த இந்த அற்புத க்ஷேத்திரம் இன்னும் அநேக கண்காட்சிகளுடனும் குதூகலத்துடனும் பிரகா சித்துக் கொண்டிருப்பதைக் காணலாம். இந்த க்ஷேத்தி ரத்தில் முக்கிய ஸ்நான கட்டம் விச்ராந்தகாட் (Vis-rantha ghat);—இந்த கட்டத்தின் சித்திரப்படத்தை இந்தப் புத்தகத்திற் காண்க. இந்தக் கட்டத்தின் முகப் பில் அநேக கண்டாமணிகளைத் தொங்க விட்டிருப்பதை யும் காணலாம். தினந்தோறும் மாலை 5 மணிக்கு இந்தக் கட்டத்தில் மகாத்மியமுள்ள யமுனை நதிக்கு ஆரத்தி தீபாராதனைகள் நடத்துகின்ற அற்புத கண்காட்சி தரி சிக்கத்தக்கதே. இந்த க்ஷேத்திரத்தில் அனேக தர்ம சாலைகளு மிருக்கின்றன. இங்கு தரிசிக்கவேண்டிய முக்கிய விடங்கள் :—கம்சராஜன் கோட்டை, கேசவ ஆலயம், பாத்ரா குண்டு, பந்தேக்கானு முதலியன.

பந்தேக்கானு என்பது வாசுதேவன், தேவகி இரு வர்களையும் அடைத்து வைத்திருந்த விடம். இந்தப் பட் டணத்தில் எங்கு பார்த்தாலும் ஸ்ரீகிருஷ்ண பகவானை மூர்த்தி ரூபமாக எழுந்தருளச்செய்து ஆராதித்து வரு கிறார்கள்.

கோகுலம் – Gokulam :—மதுராபுரியிலிருந்து தென் கிழக்கே மூன்று மைல் தூரத்தில் யமுனை நதிக்கரை யோரத்தில் இந்தப் பட்டண மிருக்கிறது. இங்கு 4000 ஜனங்கள் பெரும்பாலும் யாதவரென்ற வம்சத்தவர் (யாத வர்-இடையர்) வசிக்கிறார்கள். இவ்விடத்திலும் எந்த

வீட்டைப் பார்த்தாலும் அங்கே ஸ்ரீ கிருஷ்ண விக்கிரஹம் வைத்து ஆராதிப்பதைக் காணலாம். இந்த க்ஷேத்திரத்தி லுள்ள பல யாதவ ஸ்திரீகளும் குழந்தைகளும் யாத்திரை வாசிகளைக் கண்டதும் ஸ்ரீ கிருஷ்ண பகவான் பேரிற் பலபாட்டுக்களைப் பாடிக்கொண்டு பின்தொடர் கிறார்கள். காசு கொடுத் தாலொழிய விடார்கள். இந்த ஊரில் எந்த வீட்டிற் பார்த்தாலும் ஸ்ரீ கிருஷ்ணனைப் பற்றிய பாட்டுக்களும், ஸ்தோத் திரங்களும் கேட்கலாம். இந்த மகத்தான க்ஷேத்திரத்தைத் தரிசிக்க வேண்டியது முக்கியம். என்ன அற்புதமென்று சொல்லுவது! இந்த க்ஷேத்திரத்திலுள்ள ஜனங்கள், கிருஷ்ண பகவான்மீது வைத்துள்ள பக்தியை இவ்வள வென்று எடுத்தெழுத இயலாது. நதிக்குத் தண்ணீர் எடுக்கப் போகிற ஸ்திரீகள் கூட கிருஷ்ணனைப் பற்றிய பாட்டுக்களையே பாடிச் செல்லுகின்றனர். இந்த க்ஷேத்திரத்தில் ஒரு மார்வாடியின் தர்மசாலை ஒன்றுஉளது. சகல வசதிகளுமுண்டு. இவ்விடத்தில் தங்காமல் உடனே மதுரா புரிக்கு போய்விடலாம்.

மகாவனம் (Mahavanam) கோகுலத்திலிருந்து கிழக்கே இரண்டு மைல். பல்தேவம் என்ற க்ஷேத்திரத்திற்குப் போகும் வழியிலிருக்கின்றது. இது ஒரு குக்கிராமம். இங்கு ஓர் உன்னதமான மண்கோட்டை யிடிந்து பாழாய்க் கிடப்பதையும் பார்க்கலாம். இந்த மஹாவனத்தில் தான் யசோதை துர்க்கை என்னும் பெண் குழந்தையைப் பெற்றனள் என்று இங்குள்ள ஜனங்கள் சொல்லு

கிறார்கள். இதுவன்றி இங்கு எண்பது கற்றூண்களாற் கட்டப்பட்ட ஒரு மண்டபமிருக்கிறது. யாத்திரிகர்கள் இங்குவந்ததும் உருவத்திற் பருத்துயர்ந்த சிலர் கைகளில் தடியோடு அஸி கம்பா அஸிகம்பா என்று உரக்கக் கத்திக்கொண்டு யாத்திரிகர்களைப் பின்பற்றுகிறார்கள். இந்த மனிதர்கள் தங்களைப் பண்டாக்கள் என்று சொல்லிக் கொள்வதோடு இந்த எண்பதுகால் மண்டபம் நந்தகோபனுடைய வாசஸ்தலம் என்றும் அநேக பொய் மொழிகளைச் சொல்லித் தக்ஷிணை கேட்கின்றனர். இந்த நாடுகளிற் பண்டாக்களின் உபத்திரவம் மிகவும் வெறுக்கத்தக்கது.

மேற்படி கம்பங்களிற் செதுக்கப்பட்டிருக்கிற விக்கிரகங்களைப் பார்த்தால் ஒரு காலத்தில் இந்த மஹாவனம் புத்தருடைய சுவாதீனத்திலிருந்ததாக ஊகிக்கலாம். இதே மஹாவனத்தில் தான் ஸ்ரீ கிருஷ்ணபகவான் பாலலீலைகளைச் செய்ததும் மாடு மேய்த்ததும் என்று அங்குள்ள ஜனங்கள் சொல்லிக் கொள்ளுகிறார்கள்.

பல்தேவம்: இதுவும் ஓர் குக்கிராமம். இந்த பல்தேவம் என்ற க்ஷேத்திரம் மஹாவனத்திலிருந்து 6 மைல். மதுராபுரி பட்டணத்திலிருந்து 11 மைல். இங்கு பலராமருடைய சந்நிதி; மூர்த்தியின் உயரம் 6-அடி. விசாலமும் அழகுமுள்ள ஆலயம். ஆலயத்தின் மேற்புறத்தில் க்ஷீரசாகரம் என்றொரு தடாகமுள்ளது. ஸ்நானவிசேடம்; இவ்விடத்தில் யாத்திரிகர்கள் தங்குவதற்கு வசதி கிடையாது. மதுராபுரி பட்டணத்திலிருந்து இவ்விடம் வந்து தரிசித்துக்கொண்டு உடனே மதுராபுரி பட்டணம் திரும்பிவிடு

வது உத்தமம். இங்கும் பண்டாக்களின் தொந்தரவு அதிகம். மதுராபுரி பட்டணத்தி லிருந்து இவ்விடம் வந்துபோக எக்கா வண்டிக்கு ரூ. 2-8-0 அல்லது 3-0-0 கொடுக்கவேண்டும்.

**கோவர்த்தனகிரி:** இந்த அற்புத க்ஷேத்திரம் மதுராபுரி பட்டணத்திலிருந்து வடமேற்கில் 9 மைல் தூரத்திலிருக்கின்றது. இந்த அற்புத க்ஷேத்திரத்தின் அரிய மகிமைகளைப் பற்றிப் பாகவதத்தில் விரிவாக வரைந்திருப்பதைக் காணலாம். ஸ்ரீகிருஷ்ணபகவான் கோவர்த்தன கிரியென்ற பருவதத்தைக் குடையாகப் பிடித்து யாதவர்களையும் அவர்களின் பசுக்களையும் வருணனின் கொடிய இம்சையிலிருந்து காப்பாற்றிய இடமுமிதுவே. யாத்திரிகர்கள் முக்கியமாய்த் தரிசித்துப் போக வேண்டிய புண்ணிய க்ஷேத்திரங்களில் இதுவும் ஒன்று.

பிருந்தாவனம் (Brindaban): மதுராபுரி பட்டணத்திலிருந்து வடக்கே 6-மைல்தூரத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவான் வாசம்செய்துவந்த ஒரு மகிமையுள்ள க்ஷேத்திரம். இந்த க்ஷேத்திரத்தில் நடத்தின கண்ணனின் திருவிளையாட்டுகளுக்களவே கிடையாது. யமுனா நதி தீரத்தில் பதினாயிரம் கோபிகளுடன் கண்ணன் அநேக திருவிளையாடல்களைச் செய்ததாகச் சொல்லும் மகத்தான க்ஷேத்திரமு மிதுவே. மதுராபுரி பட்டணத்திலும் கோகுலத்திலும் பகவான் பாலகனாக விருந்து பால விளையாட்டுக்களை நடத்தினர். இந்த அற்புத க்ஷேத்திரத்திலே பகவான் யௌவன பருவமாக இருந்து பலவற்புத லீலைகளை நடத்தியும், தமது பக்தர்களைக் காப்பாற்றியும்



PHOTO பிர்ந்தைவனம்—ஸ்ரீரெங்காச்சாரி ஆலயம். BY K. S. MUTHIAH.

பக்தர்களைச் சந்தோஷிப்பித்து மிருக்கிறார். இந்த அருமை யான க்ஷேத்திரத்திற் கண்டு களிக்கவேண்டிய இடங்கள் பல. நாம் நேரில் பார்த்ததையும் விசாரித்ததில் எமக்குக் கிடைத்துள்ள விவரங்களையும் இங்கு வரையத்துணிந்தனம். 1. காளிங்கமடு, 2. கதம்ப விருக்ஷம், 3. க்ஷீரகாட்.—இந்த க்ஷீரகட்டத்தில் (காட்—கட்டம்) வஸ்திராபஹரணம்; இங்கு படர்ந்து அடர்ந்த மரம் ஒன்றைக்காணலாம். அந்த மரத்தின் கண் அநேக வர்ணமுள்ள (கலர்) வஸ்திரங்கள் தொங்க விட்டிருக்கின்றன. பகவான் மரத்தின்மீது வேணு கானம் செய்கின்ற பாவனையாகவும் மரத்தின் கீழ்ப் பல கோபி கள் நின்றுகொண்டு தம் புடவைகளைக் கெஞ்சிக்கேட்கும் பாவனையாகவும் அமைக்கப்பட்டிருப்பதைக் கண்டு களிக்க லாம். 4. கேஜிகாட்.—இந்த இடம் கேஜி என்ற அசுர னைப் பகவான் வதஞ் செய்த இடமெனத் தெரிகிறது. 5 வில்வவனம். லக்ஷ்மி வாசஞ் செய்த விடம். 6 நிதுவனம். ராதையென்ற பட்ட மகிஷியுடன் பகவான் வாசஞ் செய்த விடமாம். இந்த மஹாத்மிய முள்ள விடத்தில் பகற்காலங்க ளில் அநேகவித பக்ஷி ஜாதிகளும் வானரக் கூட்டங்களும் குவிந்திருக்கின்றன. இராக் காலங்களில் இந்த நிதுவன மென்ற மகிமையுள்ள இடத்தில் எந்த விதமான உயிர்ப் பிரா ணிகளும் தங்குவதில்லையாம். என்ன அற்புதம். 7. கோபீ ச்ர மஹாதேவ் பகவானுடைய அற்புத லீலைகளைப் பார்க் கும் பொருட்டுப் பரமசிவன் தான் கோபீகாஸ்திரீ வேடம் பூண்டு சில காலம் கண்ணனுடன் வசித்து வந்தாராம். 8. ரங்காச்சாரி மந்திர், (மந்திர்-ஆலயம்) விஷ்ணு சந்நிதி மிக்க பிரபலம். இந்த ஆலயத்தை ஸ்தாபித்தவர் தென்ன

ட்டில் காஞ்சியில் ஜனனமான காலஞ்சென்ற ரங்காச்சாரியார். இவர் அநேக காலம் கோவர்த்தனகிரி என்ற க்ஷேத்திரத்தில் வாசஞ் செய்தபடியால் இவருக்கு கோவர்த்தனம் ரங்காச் சாரி என்கிற நாமம் வழங்கப்பட்டு வருகிறது.

இந்த ஆலயத்தின் சித்திரப்படத்தையும் இந்தப் புத்தகத்திற் காண்க.

இன்னும் மதன்மோகனர் ஆலயம், ஜோதுல்கிஷோர் ஆலயம், ஸ்ரீ ரங்கநாதர் ஆலயம், இராதா கோபாலாலயம் போன்ற பல ஆலயங்கள் இந்தப் பட்டணத்திலிருக்கின்றன. ஸ்ரீ காசியில் கங்கைக்ரை யோரமாய் ஏற்பட்டிருக்கிற மாதிரி இந்த க்ஷேத்திரத்திலும் யமுனைக்கரை யோரமாய் 32 நாமங் களை யுடைய ஸ்நான கட்டங்கள் அமையப் பெற்றிருக் கின்றன.

ஆக்ரா (Agra) : மதுராபுரி பட்டணத்திலிருந்து இந்த அழகிய உன்னத பட்டணம் 39 மைல் ; மூன்றுவது வகுப்பு வண்டிக்கு 0-8.0. இந்தப் பட்டணம் யமுனை நதியை அரு குடையது. இந்தப் பட்டணத்தில் ஓர் அழகிய கோட்டையு முண்டு. இங்கு பார்க்கவேண்டிய அற்புதமான இடங்கள் பல. முக்கியமானது தாஜ்மஹால் (Taj Mahal.)

---

சென்னைப்பட்டணமி (Madras) ருந்து கீழ்ச் சமுத்தி ரக்கரையோரமாய் ஓடும் புகைவண்டித் தொடரில் பிரயாணப் பட்டு கல்கத்தா மாறலாய்க் காசிக்குப்போய்ச் சேரவேண்டிய

வழிப்பிரயாண வசதிகளை முன்னதாகச் சொல்லியுள்ளோம். மதராஸிலிருந்து மேல்பாதையாக பம்பாய் (Bombay) போகாமல் ரேச்சூர், டோண்ட், மன்மாட், ஜெப்பலப்பூர், மொக்கல்சரை வழியாகவும் போகலாம். இதுவன்றி மதராஸிலிருந்து புறப்பட்டு வழிகளிலுள்ள திருத்தணி, திருப்பதி, காளஸ்தி, துங்கபத்திரா, கிருஷ்ணு, பண்டரிபுரம், புனு, பம்பாய், நாசிக், பஞ்சவடி, உஜங்காபாத், உஜேனி, ஆக்ரா, மதுரா, கோகுலம், மதுவனம், பிருந்தாவனம், டில்லி, குரு க்ஷேத்திரம், ஹரித்துவாரம், (மாயா), அயோத்தி, பிரயாகை முதலிய க்ஷேத்திரங்களைத் தரிசித்துக்கொண்டும் காசிக்குப்போய்ச் சேரலாம். மேல்கண்ட ஸ்தலங்களின் விசேடமும் விவரங்களும் இதனடியே காண்க.

திருத்தணி (Tirutani):—மதராஸிலிருந்து 51 மைல். 3-வது வகுப்பு வண்டிக்கு சார்ஜ் ரூ. 0-10-9 ஸ்டேஷனிலிருந்து மலையின்மீதுள்ள ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி சந்நிதி ஒருமைல். இங்கு நூற்றுக்கணக்கான தர்மசாலைகளிருக்கின்றன. பிராமணர் ஓட்டல்களுமுண்டு. இந்த க்ஷேத்திரத்தில் ஆடி, தை மாதங்களில் கிருத்திகை விசேடம் மிகவும் பெரிது. யாத்திரிகர்கள் லக்ஷக் கணக்காய் கிருத்திகை தினங்களிற் கூடுவதையும் பார்க்கலாம். முக்கிய தரிசனம்.

திருப்பதி (Tirupati):—மதராஸிலிருந்து பம்பாய்க்கு போகிற வழியிலுள்ள ரேணுகுண்டா ஜங்ஷன் ஸ்டேஷனிலிறங்கி திருப்பதி போகவேண்டும். திருத்தணியி லிருந்து

ரேணுகுண்டா மார்க்கம் 40 மைல். 3-வது வகுப்பு வண்டிக்கு அணு. 0-7-9. திருப்பதி மலையின்மீது உலகப் பிரசித்தமான விஷ்ணுசந்நிதி முக்கிய தரிசனம். ஜாகை வசதிகளுமுண்டு. அங்கு பன்னிரண்டு மாதங்களிலும் பல தேசத்து யாத்திரிகர்களின் கூட்டம் நிறைந்திருக்கின்ற காக்ஷியும் பார்க்கத் தக்கதே. மலையின்மீது 31-தீர்த்தங்களிருக்கின்றன. அதில் சந்நிதியின் சமீபத்திலுள்ள "சுவாமி புஷ்கரிணி" 100 கெஜநீளம் 50 கெஜ அகலத்தோடு கூடிய விசாலமுடையது. நாற்புறமும் அழகிய படிகளமைந்தது. இந்த சுவாமி புஷ்கரணியில் வருடத்தில் ஒரு முறை சகல புண்ணிய நதிகளும் வந்து கூடுவதான ஐதிஹ்யம். முக்கிய ஸ்நான விசேடம்.

காளஹஸ்தி (Kalahasti):—ரேணுகுண்டா ஸ்டேஷனிலிருந்து 15 மைல். 3-வது வகுப்பு வண்டிக்கு ரூ. 0-2-6. ஸ்டேஷனிலிருந்து நகர் $1\frac{1}{2}$ மைல். ஒற்றை மாட்டு வண்டி கிடைக்கும்.

இது சுவர்ணமுகி நதிதீரத்திலுள்ள சிவ க்ஷேத்திரம். இங்கு மஹா சிவராத்திரி அன்று தரிசனத்துக்காக ஆயிரக் கணக்கான ஜனங்கள் கூடுவர். தர்மசாலை வசதியுமுண்டு.

ஆதிசேடனுக்கும் வாயு பகவானுக்கும் தம்மில் யார் பலிஷ்டர் என்பதாய் வாக்குவாதம் ஏற்பட்டதின் பேரில் ஆதிசேடன் மஹாமேரு பருவதத்தின் ஓர் சிகரத்தைத் தன் சிரசின்மீது தூக்கிவைத்துக் கொண்டதாகவும் வாயுபகவான் தம்முடைய முழுபலத்தையும் உபயோகித்

தில் மேற்படி பர்வதத்தின் சிகரம் போய் விழுந்த விடம் காளஹஸ்திமலை யாயிற்று என்றும் சொல்லத் தெரிகிறது.

துங்கபத்திரா (Tungabhatra):—மதராஸிலிருந்து 334 மைல். திருத்தணியிலிருந்து 285 மைல். ரேணுகுண்டாவிலிருந்து 250 மைல். 3-வது வகுப்பு வண்டிக்கு முறையே 4-5-6, 3-10-9. 3-4-0. இங்கு துங்கபத்திரா நதியில் ஸ்நான விசேடம். தர்மசாலை வசதியுமுண்டு.

கிருஷ்ண (Krishna):—துங்கபத்திராவிலிருந்து 32 மைல். 3-வது வகுப்பு வண்டிக்கு 0-7-9. ஸ்டேஷனுக்கு சமீபத்தில் கிருஷ்ணாநதி. ஸ்நான விசேடம். ஸ்டேஷனுக்கு சமீபத்தில் வசதியுள்ள தர்மசாலையு மிருக்கின்றது.

பண்டரிபுரம் (Pundharpur):—மதராசிலிருந்து பம்பாய் போகிற வழியிலுள்ள குருடுவாடி (Kuruduwadi Junc) ஜங்ஷன் ஸ்டேஷனில் வண்டிமாறி பண்டரிபுரம் போகவேண்டும். கிருஷ்ண ஸ்டேஷனிலிருந்து குருடுவாடி ஸ்டேஷன் 194-மைல். குருடுவாடி ஸ்டேஷனிலிருந்து பண்டரிபுரம் 32 மைல். மூன்றுவது வகுப்புக்கு முறையே ரூ. 0-10-0. இது பம்பாய் ராஜதானியைச் சேர்ந்த ஜோலாப்பூர் ஜில்லாவில் "பீமாநதி" தீர்த்தக்கரை யோரமுள்ள புண்ணிய க்ஷேத்திரம். இங்கு ஸ்ரீ கண்ணனின் திருச்சந்நிதி ஒன்றுளது. ஆலயத்தின் விஸ்தீரணம் 350 அடி நீளம். 170 அடி அகலம். இந்த சந்நிதியில் அர்ச்சகர்கள் மாதவ வகுப்பைச் சார்ந்தவர்கள். ஸ்ரீ கண்ணனின் அழகான மூர்த்தி ஏழடி உயரம். பண்டரிபுரம் என்ற பெயர்வரக் காரணம் இங்கு பலர் பலவிதமாய் சொல்லு

கின்றனர். "புண்டரீகன்" (Pundaregan) என்ற ஒரு பிராமண சிறுவன் தம் பெற்றோர்களுக்கு அடங்காது புத்தியீனமாய் அவமதிப்போடு அலைந்துவந்த இவன் நற்சீல னாகவும், தம் பெற்றோர்களிடம் அதிபக்தியுள்ளவ னாகவும் திருந்தினான். இவன் பல சீர்திருத்தங்களுடன் தம் மாதா பிதாக்களுக்குப் பணிவிடை செய்வதும் அவர்களின் பாதங் களைப் பக்தியோடு பூசிப்பதுமே தம் வேலையாக நடந்துவரும் சமயம் ஸ்ரீ கண்ணன் தம் பத்தினி ருக்மணி தேவியைத் தேடிக் கொண்டு இந்த பண்டரிபுரம் வந்தவர் இந்த புண்டரீகன் தம் மாதாபிதாக்களிடம் வைத்திருக்கும் அன்பையும் பக்தியை யும் கேள்விப்பட்டு இந்த பக்தனுக்கு தரிசனம் கொடுக்கு மாறு அவன் இருப்பிடம் சென்றனராம். ஸ்ரீ கண்ணன் அங்கு பிரசன்னமாகும் சமயம் புண்டரீகன், தம்மாதாபிதாக் களுக்கு பாதபூசை செய்விக்க பாதங்களைக் கழுவிக்கொண் டிருந்தான். ஸ்ரீ கண்ணன் பிரசன்னமாயிருப்பதைக் கண்ட புண்டரீகன் தம்முடைய பிதாவின் பணிவிடை முடியுமட்டும் அங்கு உட்கார்ந்திருக்கும்படி பிரார்த்தித்துக்கொண்டு தம் பிதாவின பாதங்களை சுத்தி செய்துகொண்டிருந்த இடத்தி லிருந்த ஓர் செங்கல்லை (Brick) எடுத்து கண்ணன் முன் வீசியெறிந்தானும். ஸ்ரீ கண்ணனும் அவனுடைய அதிபக்தி யைக்கண்டு தம் பத்னியைத் தேடி அலைந்துவந்த களைப்போடு இடுப்பில் கையை வைத்துக்கொண்டு அந்த செங்கல்மேல் நின்றனராம். இந்த புண்டரீகன் என்ற பக்தனுக்கு ஸ்ரீ கண்ணன் தரிசனம் கொடுத்த விடமாகையில் பண்டரிபுரம் எனப் பெயர் வந்ததாகவும் சிலர் கூறுகின்றனர். இங்கு ஸ்ரீ கண்ணனின் மூர்த்தி இடுப்பில் கையை வைத்துக்கொண்

டிருக்கிற பாவனையாகவே காணப்படுகின்றது. அஞ்ஞான முள்ள ஜனங்களுக்குக் கூட பக்தியை உண்டாக்கிப் பாது காக்கும் பொருட்டு இந்த பண்டரிபுரத்தில் ஸ்ரீ கண்ணன் எழுந்தருளியபடியால் இந்த பிரபுவுக்கு (ஸ்ரீ கிருஷ்ண பகவான்) விட்டல்நாதர் என பெயரும் சொல்கிறார்கள். விடல், வி-ஞானம், ட- இல்லாதவர்களுக்குக்கூட, ல்- ஞான பக்தியைக் கொடுப்பதாக.

புனா (Poona).—குருடுவாடி ஜங்ஷனிலிருந்து 115 மைல். 3-வது வகுப்பு வண்டிக்கு 1-13-0. இது மஹாராஷ்டிர தேசம். ஸ்டேஷனுக்குச் சமீபத்தில் மிக வசதியுள்ள சத்திரம் (தர்மசாலை) ஒன்று இருக்கின்றது. நகரின் தென் மேற்கில் பார்வதி குன்று. அங்கு பிரசித்திபெற்ற பார்வதி தேவி சந்நிதி முக்கிய தரிசனம்.

ஸ்ரீமான், திலகர், கோக்லே முதலிய புண்ணிய புருஷர்களின் ஜனன பூமியு மிதுவே.

பம்பாய் (Bombay):—புனாவிலிருந்து 119 மைல். 3-வது வகுப்புக்கு 1-14-0. இந்தியாவுக்குநேத்திரம் போன்ற இந்த அழகிய பட்டணத்தை மேல்நாட்டாரும் கூட (Fair Heaven) அழகிய தேவலோகமென புகழ்ந்திருக்கின்றனர். இந்தவிசாலமான பட்டணத்திலுள்ள உன்னதமாடமாளிகைகளைப்பற்றி யெப்படி வர்ணிப்பது. ஆ! என்ன அற்புதம்! மயனென்னும் தெய்வத் தச்சனால் நிர்மாணிக்கப் பட்டதாகச் சொல்லப்படும் அநேக மாட மாளிகைகளைக் குறித்து நாம் புராணங்களில் படித்திருக்கின்றோம். ஆனால் நேரில் கண்ட

றில்லை. அழகிலும் செல்வத்திலும், நாகரீகத்திலும் பக்தி லும் சிறந்து விளங்குகிற இந்த அழகிய பட்டணத்தை முற்றும் வர்ணிப்பதென்றால், இயற்கை அமைப்பின் அழகை அபூதலங்காரமின்றி உள்ளபடி வர்ணிக்கும் சக்தி வாய்ந்திருந்த "உருத்திரங்கண்ணனர்" "நக்கீரனர்" போன்ற பண்டைக்காலத்து உண்மைத் தமிழ்க் கவிவாணர்கள் மீண்டும் உயிர்பெற்று வந்தாலன்றி, வேறுவகையில் சாத்தியமன்றாதலின் நாம் அவைகளைப்பற்றி ஏதும் கூறாது விடுகின்றோம். இந்த பட்டண முழுதும் பார்ப்பதென்றால் அனேக மாதங்கள்பிடிக்கும். பட்டணத்தின் மத்தியில் "மாதவபாக்" "இருபாக்" என இரண்டு விசாலமும் வசதியுமான தர்மசாலைகளுமிருக்கின்றன. கல்பதேவி ரோடுக்கு (Kalba-devi Road) சமீபமாய் பிக்கெட் ரோட் (Picked Road) என்னுமிடத்தில் தமிழ் தேசத்து பிராமணர் (பத்மநாபய்யர்) ஓட்டல் ஒன்றுமிருக்கின்றது.

நாசிக்-பஞ்சவடி :—ஸ்டேஷன் நாசிக் ரோட் (Nasik Road): பம்பாயிலிருந்து 117 மைல். 3-வது வகுப்பு வண்டிக்கு ரூ. 1-13-0; ஸ்டேஷனிலிருந்து நாசிக் டவுன் 5-மைல் டிராம்கார் ஓடுகின்றது. வண்டி வசதிகளுமுண்டு. ஸ்டேஷனிலிருந்து பட்டணத்துக்குள் யாத்திரிகர்கள் போகும்போது முனிசிபாலிட்டியாரால் நபர் ஒன்றுக்கு நாலு அணு வசூல் செய்யப்படுகிறது. கோதாவரிநதி தீரத்தே உள்ள இந்த க்ஷேத்திரம் மிகப் பிரசித்தியுள்ளது.

தென்னாட்டு காட்டுக்கோட்டை நகரத்தார் சத்திரம் ஒன்று இங்குள்ளது. காட்டுக்கோட்டையார் சத்திரம் வட

தேசத்தில் காசி, பிரயாகை, அயோத்தி, கயா, நாசிக் பஞ்ச வடி இந்த விடங்களிலிருக்கிறது. ஆனல் இந்த சத்திரங்களில் பிராமண போஜனம் நடந்துவருகிறது. தமிழ்த் தேசத்தவர் தக்க முதலாளிகளிடமி (நகரத்தார்) ருந்து சிபார்ஸ் லெட்டர் கொண்டுபோனலன்றி அங்கு தாமதிக்க இடம் பெறுர். நகரத்தாரின் உத்தரவு சத்திரங்களில் மேல்பார்க் கும் ஏஜண்டுகளுக்கு இம்மாதிரி யிருந்தபோதிலும், அந்த சத்திரங்களிலுள்ள ஏஜண்டுகளில் சிலருக்குத் தமிழ்த் தேசத் தவர் என்ற அபிமானம் கூட ஏற்படாதிருப்பது மிக பரி தாபமும் விசனிக்கத் தக்கதுமே யாகும். ஆனல் இந்த நாசிக் சத்திரத்திலுள்ள ஏஜண்டுக்கு நம் தமிழ் தேசத்தவர் என்று கொஞ்சம் அபிமான மிருப்பதாய்க் காண்பித்துக் கொள்கி ருர். இங்கு வேறு சில மடங்களுமிருக்கின்றன. கோதா வரி நதியின் கீழ்க்கரையில் ஐந்துஆல விருக்ஷங்களிருந்தமை யால் பஞ்சவடி எனவும், இளைய பெருமாள் (ஸ்ரீ லக்ஷ்மணர்) இந்த விடத்தில் இராவணனது சகோதரி சூர்ப்பனகையின் நாசியை (மூக்கை) அறுத்தவிட மாதலால் நாசிகை என வும் காரணப் பெயருண்டாயிற்றெனத் தெரிகிறது. இங்கு ஸ்ரீராமர், லட்சுமணர், சீதாதேவி முதலிய சந்நிதிகளும், சில சிவாலயங்களு மிருக்கின்றன. இந்த க்ஷேத்திரத்திலும் பண்டாக்களின் உபத்திரவ முண்டு. காசியிலுள்ள கங்கா புத்திரன் டாணிக்காரன்களின் குமஸ்தாக்கள் பன்னிரண்டு மாதமும் இங்கு குடியிருந்து வருகிருர்கள். காசிக்குப் போகும் யாத்திரிகர்களைக் கண்டதும் ஷெ குமஸ்தாக்கள் பின் தொடர்ந்து விடுகிருர்கள். யாத்திரிகர்கள் எப்பொழு

தும் எச்சரிக்கையாகவே இருத்த லவசியம். தமிழ் பேசு கிறேனே யென்று ஏமாந்து விடாதீர்கள்.

உஜங்காபாத் (Hoshangapat):—நாசிக்ரோட் ஸ்டேஷனிலிருந்து கண்டுவா (Khandwa) இட்டார்ஜி (Itarasi) ஜங்ஷன் வழியாக 359 மைல். 3-வது வகுப்புக்கு ரூ. 5-10-0. இங்கு நர்மதை நதி, ஸ்நானவிசேடம். இங்கு சிவ க்ஷேத்திரம் ஸ்டேஷனுக்கு எதிரில் ராம்ஜி பாபாவின் தர்மசாலை ஒன்று இருக்கிறது. மிகவும் வசதியே! வேறு தர்மசாலைகளுமுண்டு.

உஜ்ஜினி (Ujjein):—உஜங்காபாத் ஸ்டேஷனிலிருந்து G. I. P. Ry. கிரேட் இந்தியன் பெனின்சுலா என்ற புகைவண்டித் தொடரில் பிரயாணமாகி போபால் (Phopal Junc.) ஜங்ஷன் போய் வண்டி மாறவேண்டும். போபாலிலிருந்து, போபால்—உஜ்ஜினி என்ற புகைத்தொடர் வழியாக உஜ்ஜினி போய்ச் சேரவேண்டும். Hoshangapat to Ujjain via Phopal Junction 159 மைல். 3-வது வகுப்பு வண்டிக்கு 2-2-0. ஸிப்ரா நதி (sipra) தீரத்திலுள்ள இந்த உஜ்ஜினி என்ற அவந்திகை சப்த புரிகளி லொன்றாகிய புராதீன பட்டணம். சாந்திபன் மஹாரிஷிகளிடம் ஸ்ரீ கிருஷ்ணன் வேதாத்தியயனம் செய்துகொண்ட புண்ணிய ஸ்தலமுமிதுவே. ஸ்ரீ கண்ணனின் சந்நிதி இங்கு பிரசித்தம். தரிசன விசேடம். தர்மசாலை வசதிகளுமுண்டு.

ஆக்ரா (Agra):—உஜ்ஜினியிலிருந்து போபால் வந்து அங்கிருந்து G. I. P. Ry. வழியாக ஆக்ரா போய்ச் சேர

வேண்டும். உஜ்ஜினியிலிருந்து போபால் வழியாக ஆக்ரா 428 மைல். 3-வது வகுப்புக்கு ரூ. 6-15-6. மற்றும் விவரங்கள் 81-ம் பக்கம் பார்க்கவும்.



# இரண்டே ரூபாயில்!

அதிர்ஷ்ட லக்ஷ்மி, ஐஸ்வர்ய லக்ஷ்மி, விஜய லக்ஷ்மி, வீர லக்ஷ்மி, கிரக லக்ஷ்மி, கடாட்சம் உங்களுக்கு உண்டாக, எங்கள் "லக்ஷ்மி" மாதாந்தத் தமிழ் சஞ்சிகையை உங்கள் வீட்டுக் கனுப்புகிறோம். ஒவ்வொரு மாதத்திலும், புதிய புதிய கட்டுரைகளை அணிகலன்களாகக்கொண்டு வெளி வரும்.

வருஷ சந்தா ரூ. 2.

லக்ஷ்மி ஆபீஸ் : தபல் பெட்டி 99, சென்னை.

## இந்திய மாதா.

புரட்டுப் புராணம் எழுதுவதை பிறப்புரிமையாகக் கொண்ட கன்னி மேயோ இந்தியாவை, இந்திய பழக்க ஒழுக்கங்களை, இந்திய மக்களை முக்கியமாய் இந்திய சகோதரிகளை வாய்க்கு வந்த விதமாய் தூஷித்து எழுதியிருக்கும் புஸ்தகம், படித்தால் மனம் படீரென வெடிக்கும் போலுள்ள அசாத்ய பொய்கள். வெறுந் தூஷணைகள், இந்தி, யரை இழிவுபடுத்த புதிய சூழ்ச்சிகள் யாவும் ஒருங்கே யமைந்து கிடக்கின்றன. சுய மரியாதையுள்ள ஒவ்வொருவரும், வாங்கி படித்து—மேல் நாட்டார் நம்மை இழிவு படுத்த எப்படி முற்பட்டிருக்கிறார்கள் என்பதை யறிய வேண்டிய தவசியம்.

விலை ரூ. 1—8—0

---